இப்பொழுது விற்பனையாகிறது

# மங்கை

அக்டோபர் '97

இம்மாத மங்கையின் இலவச இணைப்பான
மங்கை ஆன்மீக மலர்

## நவராத்திரி சிறப்பு மலராக
**மலர்ந்துள்ளது**

- ☆ இலங்கை சாவகச்சேரி துர்க்கை
- ☆ அருள்மிகு பிரத்யங்கரா தேவி
- ☆ கொல்லூர் மூகாம்பிகை
- ☆ மணலூர் ஏழுலோக மாதா
- ☆ அசோக்நகர் பிடாரி ஸ்ரீநவசக்தி காளியம்மன்
- ☆ புதுக்கோட்டை புவனேஸ்வரி
- ☆ அமெரிக்கா சிருங்கேரி சாரதா கோவில்
- ☆ பெண்களால் உருவான பெருங்களத்தூர் அஷ்டலக்ஷ்மி கோயில்
- ☆ காசி அன்னபூரணி

போன்ற கோயில்கள் பற்றிய சிறப்புக் கட்டுரைகள்

மற்றும் –

மேல் மருவத்தூர் மகிமைகள்,
சத்ய சாயிபாபாவின் அற்புதங்கள்,
திருவண்ணாமலை யோகி ராம் சூரத்குமார் பெருமைகள்,
கஷ்டங்கள் களையும் அஷ்டமி பூஜையின் சிறப்புகள்,
நவராதிலங்களில் நவராத்திரி,
ஸ்ரீஜயேந்திரர் பதில்கள்



விலை ரூ. 10/-



# அம்புலிமாமா

## அக்டோபர் 1997



## பொருளடக்கம்





**தனிப்பிரதி ரூ.6.00**

**வருட சந்தா ரூ.72.00**




# அம்புலிமாமா

நிறுவனர்: **'சக்கரபாணி'** நிர்வாக ஆசிரியர்: **நாகிரெட்டி**

## தங்கமய-நிகழ்ச்சி

இந்திய வரலாற்றின் அற்புத நிகழ்ச்சி ஒன்றை சென்ற இதழில் வண்ணப் படங்களுடன் கொடுத்திருந்ததை நீங்கள் கவனித்திருப்பீர்கள். ஆயிரக் கணக்கானோர் ஆங்கில ஏகாதி பத்தியத்தை எதிர்த்து நடத்திய முதலாவது புரட்சி அது. அவர்கள் தம் தாய் நாட்டை அன்னியர்களிடமிருந்து விடுவிக்க எண்ணினார்கள். நாட்டுப்பற்று மிக்கவர்கள். இவ்வாறு எண்ணுவது இயல்பே. அரவிந்தர் கூட ஆங்கிலப் போலீஸிற்கு எழுதிய கடிதத்தில் ''இந்தியத் தாய் வெறும் நிலப் பகுதியல்ல. அவள் மாபெரும் சக்தி. தெய்வாம்சம்'' எனக் குறிப்பிட்டார்.

நாம் 1947 ஆகஸ்ட் 15ல் சுதந்திரம் பெற்றோம். விடுதலைப் போராட்ட வீரர் அரவிந்தர் பிறந்ததும் ஆகஸ்ட் 15ல்தான். இந்த ஆண்டில் நாம் சுதந்திரத் தின பொன் விழா ஆண்டைக் கொண்டாடுவது போல அரவிந்தரின் 125வது ஆண்டு விழாவும் கொண்டாடப்படுகிறது.

விடுதலைப் போராட்ட வீரர் அரவிந்தரின் ஆன்மீக சக்தி வியக்கத் தக்கது. இந்தப் பொன் விழா ஆண்டின் அவரை நினைவில் கொண்டு வணங்குவோம்.

**மதிமுகம்: 101** **அக்டோபர் 1997** **புன்னகை: 4**

**தனிப்பிரதி: ரூ.6.00** **வருட சந்தா: ரூ.72.00**



செய்திகளும் தகவல்களும்

# ஹாங்காங்

ஐம்பது ஆண்டுகளுக்கு முன் பிரிட்டன் இந்தியாவிலிருந்து வெளியேறியது. இந்த ஆண்டு ஜூன் 30ல் அது சீனாவின் தெற்கிலுள்ள ஹாங்காங் தீவை சீனாவிடம் ஒப்படைத்துவிட்டு வெளியேறியுள்ளது. அது 160 ஆண்டுகள் ஆண்டது. அந்த ஆட்சி இடையில் ஏற்பட்ட ஒப்பந்தப்படி முடிவுற்றது.

பிரிட்டன் 1841ல் நடத்திய 'கஞ்சா போரில்' ஹாங்காங்கைக் கைப்பற்றியது. 20 ஆண்டுகளுக்குப் பிறகு மீண்டும் ஒரு போர் நடந்து பிரிட்டன் மேலும் சில தீவுகளைப் கைப்பற்றியது. 1898ல் ஏற்பட்ட ஒப்பந்தப்படி சீனா ஹாங்காங்கையும் மற்ற சிறு தீவுகளையும் பிரிட்டனுக்கு 99 வருஷக் குத்தகைக்கு விட்டது. இந்த ஒப்பந்தப்படி பிரிட்டன் 99 வருடங்களுக்குப் பிறகு அத்தீவுகளை சீனாவிற்குத் திருப்பிக் கொடுப்பதாய் ஒப்புக் கொண்டது. அதற்கு 1997 ஜூன் 30 என்ற தேதியும் நிர்ணயிக்கப்பட்டது.

நூறாண்டு காலத்தில் பிரிட்டிஷ் ஆட்சியில் ஹாங்காங் வியாபாரத்தில் அதிசயிக்கத் தக்க முன்னேற்றத்தை அடைந்தது. பம்பாய், சிங்கப்பூர் போன்ற இயற்கைத் துறைமுகங்கள் முன்னேற்றம் அடைந்தது போலவே ஹாங்காங்கும் முன்னேற்றம் கண்டது. இரண்டாவது உலகப் போரின் போது மட்டும் இந்த முன்னேற்றத்தில் ஒரு சிறிது தடை ஏற்பட்டது. அதற்குப் பிறகு அது 'கிடு கிடு' வென்று வெகு வேகமாய் முன்னேறி விட்டது.

பிற நாடுகளிலிருந்து வியாபாரத்திற்கும் உத்தியோகத்திற்கும் இங்கு வந்து பலர் குடியேறினார்கள். அதன் குடிமக்களாயும் ஆனார்கள். ஹாங்காங் சீனாவுடன் சேர்க்கப் பட்டுவிட்ட பிறகு பிரிட்டிஷ் ஆட்சியின் போது தமக்கு இருந்த உரிமைகளும் சலுகைகளும் போய் விடுமோ என்று பலர் சந்தேகப்பட்டார்கள். ஆனால் 1984ல் நடந்த பேச்சு வார்த்தைகளில் இது போன்ற விஷயங்களில் முடிவும் எடுக்கப்பட்டது.

ஹாங்காங் மக்களுக்குத் தனிப் பட்ட குடிமகன் உரிமை உண்டு. ஹாங்காங் தனிப்பட்ட பகுதியாக இருக்கும். அங்கு சீனாவின் சட்டங்கள் அமலில் இராது ஐம்பது ஆண்டுகள் வரை இந்த நிலை நீடித்திருக்கும். ஹாங்காங்கிற்குத் தனி ஆட்சி மன்றம் தனி நாணயம், தனிப்பட்ட வரி விதிப்பு முறை என்பன இருந்து வரும். சீனாவிடம் இதன் பாதுகாப்பு அயல் நாட்டு விவகாரங்கள் என்ற இரு துறைகள் மட்டுமே இருக்கும்.

இந்த அதிகார மாற்றம் நடந்த நாளில் பிரிட்டனின் தரப்பில் இளவரசர் சார்லஸ்ஸும் சீனாவின் தரப்பில் குடியரசுத் தலைவர் ஜியான் ஜெனினும் வந்திருந்தார்கள். ஹாங்காங் கவர்னர் கிரிஸ்யாடன் சீன மூத்த அதிகாரி துங்கிஹ்லாவிடம் அதிகார பூர்வமான ஆட்சி மாற்றத்தைச் செய்து கொடுத்தார்.

ஜூன் 30ல் பிரிட்டன் வாண வெடிகளை வெடித்தது. சீனா பத்தாயிரம் புறாக்களைப் பறக்க விட்டு மகிழ்ச்சியுடன் விழாக் கொண்டாடியது.





# கவிஞனின் ரசிகர்கள்!

மாளவ தேசத்தில் மங்களதாசன் என்ற விவசாயி இருந்தான். அவன் தன் நிலத்தில் விளைந்ததைக் கொண்டு திருப்தி அடைந்து காலம் கழித்து வந்தான். ஒருமுறை அந்த ஊருக்கு சக்திதாசர் என்ற கவிஞர் வந்தார். அவரது கவிதைகளைக் கேட்க அவ்வூர் கோவில் மண்டபத்தில் மக்கள் கூட்டமாகக் கூடினார்கள்.

அவரது கவிதைகள் எளிய சொற்களைக் கொண்டு விஷயமும் மக்கள் புரியும் விதத்தில் இருந்ததால் எல்லோரும் அவற்றை வெகுவாக ரசித்தார்கள். சிலர் அவருக்கு மலர்மாலைகளை அணிவித்துப் பாராட்டினார்கள். சிலர் தம் அன்பளிப்பாகப் பணமும் அளித்தார்கள். அவரும் எல்லோருக்கும் தம் நன்றியைச் செலுத்தி அவர்களிடம் அரசர் தனக்குக் கொடுத்த தங்கப் பதக்கத்தையும் ஜமீன்தாரர் அணிவித்த தங்கத் தோடாவையும் காட்டினார்.

சக்திதாசரின் கவிதைகளைக் கேட்கச் சென்றவர்களுள் மங்களதாசனும் ஒருவன். கவிஞர் சக்திதாசருக்குக் கிடைத்த சன்மானங்கள் பற்றி அவன் ''அடேயப்பா! நாலைந்து வரிகள் கூறினால் நிறையப் பணம் சம்பாதித்து விடலாம் போலிருக்கிறதே'' என்று எண்ணிக் கொண்டே இருந்ததால் அன்றிரவு அவனுக்குத் தூக்கமே வரவில்லை. கவிதை புனைந்து கூறினால் இவ்வளவு பரிசுகள் கிடைக்கின்றனவா என்று அவன் எண்ணி தானும் அந்த மாதிரி கவிதைகள் எழுதிப் பணமும் பரிசும் பெற வேண்டுமென அவன் எண்ணினான்.

மங்களதாசன் மழைக்குக் கூடப் பள்ளிக் கூடத்தில் போய் ஒதுங்கி நின்றவனல்ல. அவன் தான் படிக்கவில்லையே என்று சற்றும் கவலைப் படவில்லை. ஏதோ எழுதத் தெரியும். அதனால் எழுதுகோலை எடுத்துக் கொண்டு கவிதை எழுத உட்கார்ந்

—பாபநாசம் சாமா—

தான். ஆனால் எந்த விஷயத்தைப் பற்றி எழுதுவது என்று தெரியாமல் இருந்தது.

அப்போது அவன் மனைவி நன்கு குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருந்தாள். அவன் அது பற்றி எழுதுவது எனத் தீர்மானித்து ஒரு கவிதையை எழுதி விட்டான். அதைப் படித்து அவனே மகிழ்ந்து கொண்டான். அதன் பிறகே அவன் தூங்கினான். அப்போது அவன் கனவில் ஊரார் அவனது கவிதையைப் பாராட்டி ஏராளமான பரிசுகள் கொடுப்பதாகக் கண்டான். மன்னன் தங்கப் பதக்கம் அளிப்பது போலவும் ஜமீன்தாரர் தங்கத் தோடா அணிவிப்பது போலவும் கனவு கண்டான்.

அவன் காலையில் கண் விழித்ததும் யாருக்காவது தான் எழுதிய கவிதையைப் படித்துக் காட்டி அவரது பாராட்டுதல்களைப் பெற்று விட வேண்டுமென விரும்பினான். அதனால் அவன் அடுத்த வீட்டிற்குப் போய் தான் குறட்டை பற்றி எழுதிய கவிதையை அந்த வீட்டுக்காரனுக்கு வாசித்துக் காட்டினான். அதைக் கேட்ட அண்டை வீட்டுக்காரன் ''என்னப்பா இது? இரவில் உன் மனைவி விடும் குறட்டை சத்தம் கொடுக்கும் தொல்லை வேறு போதாது என்று உன் குறட்டைக் கவிதை வேறு கழுத்தறுப்பா? போ போ'' என்று விரட்டி விட்டான்.

மங்களதாசனின் முகம் சுண்டிப் போயிற்று. ஆனாலும் அடுத்த வீட்டுக்காரனுக்கு கவிதையை ரசிக்கத் தெரியவில்லை என்று எண்ணிக் கொண்டு தன் வீட்டிற்கு வந்து விட்டான். அன்று



மாலை வேறு யாரிடமாவது கவிதையைப் படித்துக் காட்டலாமென எண்ணிக் கிளம்பியதும் சற்று தூரத்தில் பள்ளிக்கூட ஆசிரியர் பாலகிருஷ்ணன் சென்று கொண்டிருப்பதை அவன் கண்டான். உடனே அவன் அவரைக் கூப்பிட்டு ''என் கவிதையைக் கேளுங்கள்'' என்று சொல்லி தான் எழுதிய குறட்டைக் கவிதையைப் படித்துக் காட்டினான்.

அந்த ஆசிரியர் மங்களதாசனிடம் கொஞ்சம் பணம் கடன் வாங்கி இருந்தார். அதனால் அது மட்டமான கவிதை என்று அவரால் சொல்ல முடியவில்லை. அதனால் அவர் ''மங்களதாசா! நீ கவிதை எழுதுவதில் சக்திதாசரையும் மிஞ்சி விட்டாய். ஆகா! இதைப் புலவர்கள் கூடப் புரிந்து கொள்ள முடியாது. அவ்வளவுக்கு

TA-F-2



இது உயர்ந்து விட்டது. எனவே இதை ஜமீன்தாரருக்கும் படித்துக் காட்டி னால் சக்திதாசருக்குத் தங்கத் தோடா அணிவித்தது போல உனக்கும் அணி விப்பார்'' என்று கூறிவிட்டுப் போனார்.

பள்ளி ஆசிரியர் கூறியது முழுக்க முழுக்க உண்மை என்று மங்களதாசன் எண்ணி மறுநாளே ஜமீன்தாரரைப் போய்ப் பார்த்தான். அவரிடம்தான் எழுதிய கவிதையை அவன் படித்துக் காட்டவே ஜமீன்தாரரின் தலையே சுழன்றது. ஆனாலும் சமாளித்துக் கொண்டு அவர் ''நான் இது மாதிரிக் கவிதையை இதுவரை கேட்ட தில்லை'' எனக் கூறி அவனுக்கு ஒரு சால்வையைப் போர்த்தி நூறு ரூபா யைப் பரிசாகக் கொடுத்தார். இது அவர் வேடிக்கைக்காகச் செய்தார். அதை வாங்கிக் கொண்டு தன் ஊருக்கு வந்த மங்களதாசன் எருமை, நாய் போன்றவற்றின் மீதெல்லாம் கவிதை களாக எழுதித் தள்ளினான். அவற்றை மன்னர் கேட்டு கண்டிப்பாக தங்கப் பதக்கம் கொடுப்பார் என அவன் உறுதியாக நம்பினான்.

அவன் தலைநகருக்குப் போய் மன்னனை பேட்டி கண்டு தான் ஒரு விவசாயி என்றும் கவிதை எழுதி இருப்பதாகவும் கூறினான். மன்னன் இலக்கிய ரசிகன். ஒரு விவசாயி கவிதை புனைந்திருப்பதாகக் கூறிய தும் அவனது கவிதைக் கேட்க ஆவல் கொண்டான். அதனால் தர்பாரில் எல்லோர் முன்னும் அவனது கவிதை களைப் படித்துக் காட்டுமாறு கூறினான்.

அவன் கவிதையைப் படித்ததும் மன்னனுக்குத் தலை வேதனையாக இருந்தது. சபையோர் தம் காதுகளைப் பொத்திக் கொண்டனர். மன்னன் அவ னைக் கோபத்தோடு பார்த்து ''அடே முட்டாளே! இவ்வளவு பேரை கலக்கி விட்ட இது போன்ற மட்ட ரகமான கவிதையை இதுவரை நான் கேட்டதே இல்லை. இதை யாருமே பாராட்ட மாட்டார்கள்'' என்றான்.

அப்போது மங்களதாசன் பயந்து போய் ''அரசே! எங்கள் ஊர் பள்ளி ஆசிரியர் பாலகிருஷ்ணன் எனது கவிதையைப் பண்டிதர்களால்தான் புரிந்து கொள்ள முடியும் என்றார். எங்கள் ஜமீன்தாரரும் என் கவிதை யைக் கேட்டு எனக்கு சால்வை போர்த்தி நூறு ரூபாய் சன்மானமும் அளித்தார். அவரும் இது போன்ற கவிதையைக் கேட்டதே இல்லை

என்றும் கூறினார்'' என்றான்.

அப்போது மன்னன் ''இவன் ஏதேதோ உளறுகிறான். இவனுக்குப் புத்தி சரி இல்லை என்று சந்தேகிக்கிறேன். எனவே இவனைப் பற்றிய முழு விவரங்கள் தெரியும் வரை சிறையில் அடைத்து வையுங்கள்'' என்று கட்டளை இட்டான்.

வீரர்களும் மங்களதாசனைச் சிறையில் அடைத்து விட்டு அவனைப் பற்றி அறிய அவனது ஊருக்குச் சென்றார்கள். பள்ளி ஆசிரியர் பாலகிருஷ்ணனைக் கண்டு அவர்கள் மங்களதாசனைப் பற்றி விசாரிக்கவே அந்த ஆசிரியரும் ''அவன் ஒரு பைத்தியம். ஏதோ தான் கவிதை எழுதுவதாகக் கூறி எதையோ கிறுக்குவான்'' என்றார். அதன்பின் அவர்கள் ஜமீன்தாரரைப் போய்க் கண்டனர். அவரும் ''அவனுக்குக் கவிதைப் பித்து. ஆனால் எழுத வராது. ஏதோ ஆறுதலாக இருக்கட்டும் என்று பரிசளித்தேன்'' என்றார்.

வீரர்கள் மன்னனிடம் இந்த விவரங்களைத் தெரிவித்தார்கள். அதைக் கேட்டு மன்னன் ''சரி சரி. அந்தப் பைத்தியத்தை விடுதலை செய்யுங்கள்'' என்று கூறினார். மங்களதாசனும் இனி மேல் கவிதையைப் பற்றி நினைக்கவே கூடாது என்று எண்ணிதான். தப்பியதே போதும் என எண்ணிக் கொண்டு தன் ஊரை அடைந்தான்.

ஒரு வாரகாலமாயிற்று. அப்போது அவன் முன் பின் பார்த்திராத ஒருவன் அவனிடம் வந்து ''ஐயா! மகா கவியே!! வணக்கம்'' என்றான். அதைக் கேட்ட மங்களதாசன் நடு நடுங்கியவாறே'' நான் மகாகவியா? சிறையிலிருந்து விடுபட்டதும் இனி



கவிதை பற்றி நினைக்கக் கூடாது என்று தீர்மானித்துக் கொண்டிருக்கிறேன் ஆமாம். நீங்கள் யார்? இதற்கு முன் உங்களை நான் பார்த்தது கூட இல்லையே'' என்றான்.

அந்த மனிதனும் ''கவிஞரே! நீங்கள் என்னைப் பார்த்திரா விட்டாலும் நான் உங்களைப் பார்த்திருக்கிறேன். என் பெயர் நிசாசரன். நான் பேய், பிசாசுகளை அடக்கும் மாந்திரீகன். மன்னனது தர்பாரில் உங்களது கவிதைகளைக் கேட்டேன். உங்கள் கவிதைகளுக்கு நிறையப் பணம் கிடைக்க வழி உள்ளது'' என்றான்.

மங்களதாசனோ ''வேண்டாம். பணத்தாசையால் ஒருமுறை நான் பட்ட அவஸ்தை போதும்'' என்றான். அந்த மனிதனோ ''இம்முறை அப்படி நடக்காது. என்னுடன் ஓரிடத்திற்கு

வந்தால் உங்களுக்குப் பணம் கிடைக்கும்'' என்றான். மங்களதாசனும் அந்த மாந்திரீகனுடன் கிளம்பினான். அப்போது நன்கு இருட்டி விட்டது. மங்களதாசனை அவன் ஒரு மயானத்திற்கு அழைத்துச சென்றான்.

மங்களதாசன் அவனிடம் ''நான் என் கவிதைகளைப் பிணங்கள் கேட்கவா கூற வேண்டும்?'' என்று கேட்கவே மாந்திரீகனும் ''இல்லை. பிசாசுகளுக்குத்தான் மனிதர்களைவிட, கவிதையின் மதிப்பு நன்கு தெரியும். நீங்கள் உரத்த குரலில் உங்கள் கவிதைகளைப் படியுங்கள்'' என்றான். மங்களதாசனும் கண்ணை இறுக மூடிக் கொண்டு தன் கவிதைகளை உரத்த குரலில் கூறினான்.

அப்போது பத்து, பனிரெண்டு பிசாசுகள் அங்கு வந்து அவனது கவிதைகளைக் கேட்டு ''பேஷ், சபாஷ்'' என்று கூவின. மங்களதாசன் கண் திறந்து பார்த்தான். தன்னெதிரே பிசாசுகள் இருப்பது கண்டு பயந்து நடுங்கினான். சில பிசாசுகள் மலர் மாலைகளை வரவழைத்து அவன் கழுத்தில் போட்டன. சில பண மூட்டைகளையும், நகைகள் மூட்டைகளையும் அவன் முன் போட்டன. கை தட்டி அவனது கவிதைகளை ரசித்து விட்டு மறைந்து போயின.

அச்சமயம் மாந்திரீகன் ''பார்த்தீர்களா! பணம் கிடைத்து விட்டது. இதில் பாதியை எனக்குத் தந்து விட வேண்டும்'' என்றான். மங்களதாசனும் அவன் கேட்டபடி கொடுத்து ''அது சரி. என்கவிதை பிசாசுகளுக்குப் பிடிக்கும் என்று எப்படி உங்களுக்குத் தெரிந்தது?'' என்று கேட்டான்.

மாந்திரீகனும் ''எனக்குப் பிசாசுகள் மொழி தெரியும். அன்று அரச சபையில் நீங்கள் உங்கள் கவிதையைக் கூறியதைக் கேட்டதுமே ''இது மனிதர்கள் பேசும் மொழி இல்லையே. பிசாசுகளின் மொழி போல அல்லவா உள்ளது'' என்று எண்ணினேன். அதனால்தான் உங்களை இங்கே அழைத்து வந்தேன்'' என்றான்.

அது கேட்டு மங்களதாசன் திகைத்துப் போனான். அதற்குப் பிறகு கவிதை எழுதவில்லை. ஆனால் கவிதை புனைந்து பணம் சம்பாதிக்க வேண்டும் என்ற அவனது ஆசை எப்படியோ நிறைவேறி விட்டது!





# கடிதம் செய்த மாறுதல்

பார்வதி அம்மாளுக்கு எழுதப் படிக்கத் தெரியாது. அவள் தன் மகன் கண்ணனுக்கு படித்த பெண்ணான ஜெயாவைக் கல்யாணம் செய்து வைத்தாள். ஜெயாதான் படித்தவள் என்று கர்வம் கொண்டு தன் மாமியாரை அலட்சியப் படுத்தலானாள். பார்வதியும் தனக்கு எழுதப் படிக்கத் தெரியவில்லை என்ற காரணத்தால் தன் மருமகள் செய்த அவமதிப்புகளைச் சகித்துக் கொண்டிருந்தாள்.

கண்ணனுக்குத் தன் தாயின் நிலைமை நன்கு புரிந்தது. ஆனால் தன் மனைவி ஜெயாவின் போக்கு சரி இல்லை என்று அவன் நினைத்தான். இப்படி இருக்கையில் பார்வதி அம்மாளுக்கு ஒரு கடிதம் வந்தது. அது அவளது தூரத்து உறவினர் ஒருவர் எழுதியது. அதில் பார்வதி அம்மாளுக்கு லட்சுமி அம்மாள் என்ற உறவினள் இறக்குமுன் தன் லட்ச ரூபாய் ஆஸ்தியை விட்டுப் போயிருப்பதாயும் ஆனால் பார்வதி அம்மாள் எழுதப் படிக்கத் தெரிந்திருந்து பத்திரத்தைப் படித்தாலே அந்த சொத்து அவளுக்குக் கிடைக்கும் என்ற நிபந்தனையும் இருந்தது.

ஜெயாதான் அக்கடிதத்தைப் பார்வதி அம்மாளுக்குப் படித்துக் காட்டினாள். அப்போது கண்ணனும் அங்கே இருந்தான். ஜெயா கடிதத்தை படித்து முடித்ததும் பார்வதி அம்மாள் ''அடடா! எனக்கு எழுதப் படிக்கத் தெரியாதே. அநியாயமாய் லட்ச ரூபாய் இழக்க வேண்டி இருக்கிறதே'' என்று வருத்தப்பட்டாள். அப்போது ஜெயா ''நீங்கள் இப்போது எழுதப் படிக்கக் கற்றுக் கொள்ளுங்கள். ஆறே மாதத்தில் நீங்கள் சுலபமாக எழுதப் படிக்கத் தெரிந்து கொண்டு விடலாம். பிறகு பத்திரத்தைப் படித்துக் காட்டி நீங்கள் லட்ச ரூபாயை அடைந்து விடலாம்'' என்றாள்.

பார்வதியும் ''இந்த வயதில் நான்

—எஸ். சோபினி—

யாரிடம் போய் எழுதப் படிக்கக் கற்றுக் கொள்வேன்? வெட்கமாக இருக்கிறது'' என்றாள். அப்போது கண்ணன் ''படிப்பதற்கு வயது ஒரு தடையும் இல்லை. எப்போது வேண்டுமானாலும் எழுதப் படிக்கக் கற்றுக் கொள்ளலாம். நீ மட்டும் அந்தப் பத்திரத்தைப் படித்துக் காட்டி விட்டால் லட்ச ரூபாய் சொத்து உனக்குக் கிடைக்கும்'' என்றான்.

ஜெயாவும் ''நீங்கள் எழுதப் படிக்க கற்றுக் கொள்ளுங்கள். நான் தினமும் உங்களுக்குச் சொல்லிக் கொடுக்கிறேன். ஆறே மாதத்தில் நீங்கள் எழுத படிக்கத் தெரிந்து கொண்டு விடுவீர்கள்'' என்றாள். பார்வதி அம்மாளும் தன் மகனும் தன் மருமகளும் கூறிய படி எழுதப் படிக்கக் கற்றுக் கொள்வதாகக் கூறினாள்.

ஜெயாவும் தன் மாமியாருக்கு எழுதப் படிக்கக் கற்றுக் கொடுக்கலானாள். பார்வதி அம்மாளும் அக்கறையுடன் எழுதிப் படித்து ஆறே மாதத்தில் எதையும் படித்துக் காட்டும் திறமையைப் பெற்று விட்டாள். ஜெயாவும் மிகவும் சிரத்தை எடுத்துக் கொண்டு கற்பித்ததும் இந்த முன்னேற்றத்திற்குக் காரணம்.

ஒருநாள் பார்வதி அம்மாள் கண்ணனிடம் ''இப்போது என்னால் எதையும் படிக்க முடியும். நாம் போய் பத்திரத்தைப் படித்துக் காட்டி ஆஸ்தியை அடைந்து விடலாம்'' என்றாள். கண்ணன் சிரித்துக் கொண்டே ''அம்மா! லட்ச ரூபாயும் வராது. சொத்தும் கிடைக்காது. ஏனென்றால் உன்னையும் உன் மருமகளையும் சேர்த்து வைக்கவும் நீங்கள் சுமுகமாகப் பழகவும் நான் செய்த தந்திரம் இது. அந்தக் கடிதத்தை எழுதியவன் நான்தான். லட்ச ரூபாய் என்பது என் கற்பனை'' என்றான்..

ஜெயாவும் பார்வதி அம்மாளும் சிரித்து விட்டார்கள். பார்வதி அம்மாளும் ''பரவாயில்லை. நான் இனி ராமாயணம், பாரதம் என்று படித்துக் கொண்டு பொழுதைப் போக்குவேன்'' என்றாள். ஜெயாவும் ''நானும் முதியோர்களுக்கு எழுதப் படிக்கக் கற்றுக் கொடுத்து நாட்டுக்கு என்னாலான ஒரு நற்பணியைச் செய்கிறேன்'' என்றாள்.

கண்ணன் புன்சிரிப்புடன் நின்றான்!





# மாமன்னர் அசோகர்

## 9

(மகத மன்னன் பிந்து சாரனின் முதல்மகன் சுசிம்மன். மன்னனின் பல ராணிகளில் பிராம்மண ராணிக்குப் பிறந்தவன் அசோகன். அவன் சுசிம்மனைவிட எல்லா விதத்தி லும் சிறந்தவன். அசோகன் அவந்திக்கு ராஜப் பிரதிநிதியாக ஆட்சி புரிய அனுப்பப்பட் டான். சுசிம்மன் அசோகன் புகழடைவது கண்டு பொறாமை கொண்டு அவனைக் கொல் வதற்கு இரு நடன மாதுகளை அனுப்பினான். அவர்கள் அசோகன் விதிஷாவில் முகாமிட்ட போது அவனைக் கொல்ல முயன்றார்கள் ஆனால் புத்தபிக்ஷு உபகுப்தரின் சிஷ்யை விதிஷாதேவி அவனைக் காப்பாற்றினாள். அசோகன் அவளை மணந்தான். பிறகு–)

உஜ்ஜயினி க்ஷிப்ரா நதிக்கரையில் அமைந்த அழகிய நகரம். அசோகன் எல்லோர் அன்பையும் ஆதரவையும் தன் மனைவியின் இரக்க சுபாவத்தால் அன்பு காட்டும் வழி முறைகளாலும் பெற்றுவிட்டான். ஐந்து ஆண்டுகள் கழிந்தன. விதிஷா வும் ஒரு ஆண் குழந்தையையும் ஒரு பெண் குழந்தையையும் பெற்றெடுத் தாள். மகனின் பெயர் மகேந்திரன். மகளின் பெயர் சங்மித்திரை.

அசோகன் தன்தந்தையைக் கண்டு வர யசனைப்பாடலிபுத்திரத்திற்கு அனுப்பினான். அவனும் பிந்துசாரனி டம் அவந்தியில் அசோகன் புரிந்து வரும் நல்லாட்சி பற்றிக் கூறவே பிந்து சாரன் ''அசோகனின் பேச்சை எடுக் காதே. அவன் எனக்குக் கூடத் தெரி விக்காமல் யாரோ ஒருத்தியை மணந்த கொண்டான். இதுதான் ஒரு மகன் தந்தையிடம் நடந்து கொள்ளும் விதமா? என்று சீறினான்.

அப்போது யசன் ''பிரபுவே! அசோகர் தம் விவாகம் பற்றித் தங்களுக்கு எழுதி தங்கள் அனுமதி பெற்றுத் தானே விதிஷாவை மணந்து கொண்டார்! தாங்கள் கூறுவது ஆச்சரியமாக இருக்கிறது. ''எனக் கூறி விதிஷா இருமுறை அசோகனைக் காப்பாற்றியதை விவரமாகக் கூறினான். அப்போது பிந்துசாரனுக்கு விஷயம் புரிந்து விட்டது. அசோகனை மன்னிப்பது போல் அவனது கண்களிலிருந்து கண்ணீர் தாரை தாரையாக வடிந்தது.

அன்று மாலை பிந்துசாரன் தன் அமைச்சரை அழைத்து ''அமைச்சரே! நான் இன்னமும் வெகு நாட்கள் உயிர் வாழ மாட்டேன். என் கவலையெல்லாம் இந்த மகத சாம்ராஜ்யத்தைப் பற்றித்தான் உள்ளது. சுசிம்மனால் இதை ஆள முடியுமா? அவனைத் தட்சசீலத்திலிருந்து இங்கு வரச் சொல்லி ஆள் அனுப்பலாமா? என் கடைசி காலத்தில் என் மூத்த மகன் என்னருகே இருக்க வேண்டாமா?'' என்றான்.

அமைச்சரும் ''அரசே! உங்கள் கவலையும் நீங்கள் என்ன நினைக்கிறீர்கள் என்பதும் எனக்குத் தெரிந்துவிட்டது. நானும் மனம் திறந்து நான் நினைப்பதைக் கூறிவிடுகிறேன். இளவரசர் சுசிம்மரால் நமக்குக் கெட்ட பெயர் தான் கிடைக்கிறதேயொழிய நல்ல பெயர் கிடைக்கிறதில்லை. தட்சசீலத்தில் கலகக்காரர்களை அடக்காமல் அவர்களுக்குப் பணம் கொடுத்து அவர்களது நடவடிக்கைகளை நிறுத்தி வைத்திருக்கிறான். கலகக்காரர்களோ இரக்கமின்றி மக்களைத் துன்புறுத்திக் கொண்டிருக்கிறார்கள். கொள்ளை



கள், கொலைகள் என்று அங்கு ஏராளமாக நடைபெற்று வருகின்றன. இதனால் கலகக்காரர்கள் கை ஓங்கிவிட்டது. மக்கள் கஷ்டப்படுகிறார்கள். இது எவ்வளவு நாட்கள் நீடிக்கும்? இன்னும் சில நாட்களில் மீண்டும் கலவரங்கள் மூளலாம் என எனக்குத் தகவல்கள் வந்து கொண்டிருக்கின்றன. மேலும் இளவரசர் தம் கூட்டாளிகளுடன் கேளிக்கைகளில் மூழ்கி இருக்கிறாராம். அங்கு ஆட்சி என்பதே இல்லாது சீர் குலைந்து விட்டது'' என்றார்.

பிந்துசாரனும் ''எனக்கும் இவ்வாறு தான் தகவல்கள் கிடைத்துள்ளன. அவை மிகைப் படுத்தப்பட்டவை என்று நினைத்தேன். சொல்லுங்கள். சுசிம்மனுக்கு எனக்குப் பிறகு மன்னனாகும் தகுதி இல்லை என்றா கருதுகிறீர்கள்?'' என்று கேட்டான்.



அமைச்சரும் இல்லை என்று கூறவே மன்னனும் ''அப்படியானால் வேறு யாருக்கு அத் தகுதி உள்ளது?'' என்று கேட்டான்.

அமைச்சரும் ''இக்கேள்வியைத் தாங்கள் கேட்டதால் கூறுகிறேன். அத் தகுதி அசோகனுக்கு உள்ளது. அவன் தட்சசீலத்தில் கலகங்களை அடக்கி னான். இப்போது அவந்தியில் அவ னது ஆட்சி நன்றாக உள்ளது'' என் றார். பிந்துசாரனும் பெருமூச்சு விட்ட வாறே ''இது பற்றி யோசித்து முடிவு எடுக்கிறேன்'' என்றான். அமைச்சரும் ''ஆம். நன்கு யோசித்து நல்ல முடிவை எடுங்கள்'' எனக் கூறி மன்ன னிடம் விடை பெற்றுக் கொண்டு சென்றார்.

ஆனால் அவர் ஒரு மணி நேரத்தில் மீண்டும் அழைக்கப்பட்டார். இம் முறை அவரை அழைத்து வரச் சொன் னது பட்டத்து ராணியே. மன்னரின் உடல் நிலை மோசமாகி விட்டதால் அரசாங்க வைத்தியரும், புரோகிதரும் வந்திருந்தார்கள். அமைச்சரும் ''என்ன விஷயம்?'' என்று கேட்கவே வைத்தியரும் ''மன்னர் நெஞ்சு வலிக் கிறது என்று கூறியவாறே மயக்க முற்று விழுந்து விட்டார்'' என்றார். அப்போது பட்டத்து ராணி ''அமைச் சரே! இப்போதே என் மகன் சுசிம் மனை தட்ச சீலத்திலிருந்து இங்கு வரவழைக்க வேண்டும்'' என்றாள்.

அமைச்சரும் ''இப்போதே நான் ஒரு வீரனை அனுப்புகிறேன்'' எனவே ராணியும் ''அந்த வீரன் இங்கிருந்து போகுமுன் என்னை வந்து பார்த்து விட்டுப் போகட்டும். நான் என் மக னுக்கு ஒரு கடிதம் எழுதிக் கொடுக் கிறேன்'' என்று கூறிவிட்டு அங் கிருந்து சென்றாள். அமைச்சரும் ''வைத்தியரே! நிலைமை எப்படி இருக்கிறது?'' என்று கேட்கவே. வைத்தியரும் ''மிகவும் கவலைக்கிட மாக உள்ளது. நாளை வரை மன்னர் உயிருடன் இருந்தால் அது நம் அதிர்ஷ் டமே'' என்றார்.

அமைச்சரும் ''அப்படியானால் கூடியவரை நல்ல மருந்துகளைக் கொடுத்து குணப் படுத்த முயற்சியுங் கள். தேவைப்பட்டால் தாமதிக்காமல் எனக்குத் தகவல் சொல்லி அனுப்புங் கள். நான் மற்ற அவசர வேலைகளை கவனிக்கிறேன்'' என்று கூறி விட்டு அங்கிருந்து சென்றார். போகும் போது ஒரு வீரனிடம் ''நீ போய் உடனே நம் சேனாதிபதியை என் அந்தரங்க அறைக்கு வரும்படி சொல்'' என்று

கட்டளையிட்டுவிட்டுச் சென்றார்.

யசன் வந்து ராணி சுபத்திராவைக் கண்டு பேசிக் கொணடிருந்தான். அவள் ''என் மகன் அசோகனைப் பார்த்து சில வருடங்காளாகி விட்டன. நான் அவனுடன் சேர்ந்து இருக்க விரும்புகிறேன்'' என்றாள். யசனும் ''ஆகா! சந்தோஷமாக இருக்கலாம் விதிஷா உங்களுக்கு ஏற்ற மருமகள். அவள் பெற்றெடுத்துள்ள உங்கள் பேரனும் பேத்தியும் மணியானவர் கள். நீங்கள் உஜ்ஜயினிக்கு வந்து இருந்தால் ஒரு மகிழ்ச்சியாக உள்ள குடும்பத்தையே நாங்கள் எல்லோரும் காண்போம்'' என்றான்.

சுபத்திராவும் ''எனக்கும் அங்கு வர விருப்பமே! ஆனால் மன்னரின் உடல் நிலை இப்போது கவலைக்கிடமாக உள்ளதே'' என்றாள். அப்போது இரு பணிப் பெண் வந்து அவளை வரும் படி சைகை செய்யவே அவளும் யச னிடம் ''நீ இங்கேயே இரு. ஒரு நிமி டத்தில் திரும்பி வந்து விடுகிறேன்'' என்று கூறிவிட்டுச் சென்றாள். இரண் டொரு நிமிடங்களில் அவள் திரும்பி வந்து ''மன்னரின் உடல் நிலை மிக வும் மோசமாக இருக்கிறதாம். நாளை விடியும்வரை உயிருடன் இருப்பாரா என்பதே சந்தேகமாக இருக்கிறதாம். சுசிம்மனுக்கும் தகவல் போய்விட்ட தாம். அவன் என்னை முழுக்க முழுக்க வெறுக்கிறான். அவன் வந்து மன்ன னாகி விட்டால் என்னை நிம்மதியு டன் வாழ விடமாட்டான். அதனால் நீ கொஞ்ச நாள் இங்கேயே இரு. நிலைமை எப்படி உள்ளது என்று பார்த்துவிட்டு நான் உன்னுடன் உஜ்ஜ யினிக்குக் கிளம்பிவிடுகிறேன்'' என்



றாள்.

அது கேட்டு யசன் ''அம்மா, நீங்கள் கொஞ்சமும் பயப்பட வேண்டாம். சுசிம்மன் மன்னனாகி மகத நாட்டின் அரியாசனத்தில் அமரப் போவ தில்லை. உங்கள் மகன் அசோகன் தான் மன்னனாகப் போகிறான்'' என் றான்.

அது கேட்டு சுபத்திரா திகைத்தாள் யசனோ ''சற்றுப் பொறுமையுடன் இருங்கள். உங்கள் ஆசிகளையும் ஆதர வையும் எனக்கு அளியுங்கள். ஆம். நான் உங்கள் மகனுக்காக உடனடியாக செயலில் இறங்க வேண்டும். இனி வரப் போகும் சில நாட்களில் தான் மக தத்தின் தலைவிதியை நிர்ணயிக்கப் படும். நான் இனி உங்களை அடிக்கடி சந்திக்க முடியாது போனாலும் போக லாம். நீங்கள் எச்சரிக்கையுடன்



மூத்த மகன் என்ற முறையில் நீங்கள் சுசிம்மனைத்தானே ஆதரிக்க வேண்டியிருக்கும்?'' என்று கேட்டார்.

சேனாதிபதியும் ஆம் எனவே அமைச்சர் ''மூத்த மகனுக்குத்தான் உரிமை என்றாலும் மகதத்தைப் பொறுத்தவரை அரசாங்க புரோகிதரின் அபிப்பிராயம் இவ்விஷயத்தில் மிக முக்கியத்துவம் பெற்றுள்ளது. சற்று நினைத்துப் பாரும். மகதத்தின் அரசாங்க புரோகிதர் என்றுதான் சாணக்கியர் முதலிடம் பெற்றார். பிறகுதான் அவர் அமைச்சர் என்று கருதப்பட்டவர். எனவே அந்த மரபுதான் தொடர்ந்து வரும்'' என்றார்.

சேனாதிபதியும் ''அப்படியானால் தாங்கள் என்ன சொல்ல விரும்புகிறீர்கள்? என்று கேட்கவே அமைச்சரும் ''நான் எல்லா அரசகுமாரர்களின் ஜாதகங்களையுமபார்த்துவிட்டேன். அசோகன் ஒருவனுக்கேதான் மகதத்தின் மன்னனாகும் அதிர்ஷ்டம் இருக்கிறது. சுசிம்மனுக்கு கிரக நிலை சரியாக இல்லை. அவன் ஒரு வேளை நாட்டின்மன்னனாகி விட்டால்நாடே படு நாசத்திற்கு உள்ளாகிவிடும். இது சோதிடர்களின் கணிப்பு'' என்றார்.

சேனாதிபதியும் ''அப்படியா? சோதிடர்களின் இந்த கணிப்பை நாம் பிரபுக்களிடையேயும் பிரமுகர்களிடையேயும் பரவச்செய்யலாம். அவர்கள் நீங்கள் சொல்வதை அப்படியே நம்புவார்கள். நீங்கள் அசோகனுக்கு ஆதரவு அளித்தால் அவன் மகதத்தின் மன்னனாவதில் எவ்வித சிரமமும் இராது.'' என்றான். அமைச்சரும் ''இதில் நான் நாட்டின் நலனைக் கருத்தில் கொண்டே அசோகன் மன்னனா

இருந்து அரண்மனையில் நடப்பனவற்றை உங்களுக்கு நம்பகமான ஒரு பணிப் பெண் வாயிலாக எனக்கு அவ்வப்போது தெரிவித்துக் கொண்டிருங்கள்'' என்று வேண்டினான்.

சுபத்திராவும் அவ்வாறே செய்வதாகக் கூறவே யசனும் அவளிடம் விடை பெற்றுக் கொண்டு அங்கிருந்து சென்றான்.

அமைச்சர் தன் அந்தரங்க அறைக்குள் சேனாதிபதியுடன் ரகசியமாகப் பேசி கொண்டிருந்தார். அவர் சேனாதிபதியிடம் ''நீங்கள் கூறுவது முற்றிலும் சரியே. நான் நினைப்பது போலவே நீங்களும் சுசிம்மன் அரியாசனத்தில் அமரக் கூடாது என்றே நினைக்கிறீர்கள். ஆனால் அரியாசனத்திற்கு இன்னொருவர் உரிமை கொண்டாடினால் அப்போது மன்னனின்

வதை விரும்புகிறேன். வேறு எவ்வித நோக்கமும் கிடையாது'' என்றார்.

சேனாதிபதியும் ''இது எல்லோருக்கும் நன்கு தெரிந்தது தானே. நீங்கள் நாட்டின் நலனைத்தான் முதலில் கருதுவீர்களென்பதை யாவரும் அறிவார்கள். நான் இப்போதே தட்சசீலத்திற்கும் உஜ்ஜயினிக்கும் ஆட்களை அனுப்பி இங்குள்ள நிலைமையைத் தெரிவிக்கிறேன். அவர்களில் யார் இங்கு முதலில் வந்து சேர்கிறார்களென்று பார்ப்போம்'' என்று கூறி விட்டு அமைச்சரிடம் விடை பெற்றுக் கொண்டு சென்றான்.

யசன் நடனமாதுகளிடம் ''இங்கு யார் முதலில் வரப்போகிறார்கள் என்பதைப் பொறுத்துத்தான் இனி எல்லாம் நடக்கும்'' என்றான். அந்த நடன மாதுகள் தாம் அசோகனைக் கொல்ல வந்தவர்கள். யசன் அவர்களுக்கு மன்னிப்பு அளித்து விதிஷாதேவியின் பணிப் பெண்களாக அமர்த்தினான். அவர்களும் ''நாங்கள் என்ன செய்ய வேண்டும் என்பதைச் சொல்லுங்கள்'' என்று கேட்டார்கள்.

யசனும் ''நீங்கள் அசோகருக்குப் பட்டிருக்கும் நன்றிக் கடனைச் செலுத்த வேண்டும். ஏனெனில் அவர் உங்கள் மன்னித்து விட்டார். வேறு யாராவது அந்த நிலையில் இருந்திருந்தால் உங்களக் கொன்றிருப்பார்கள்'' என்றான். அவர்களும் ''ஆம். கருணைக் கடல் புத்தர் பிரானின் அருளால் நாங்கள் உயிர் தப்பினோம். விதிஷா தேவியின் தயவால் நாங்கள் மரண தண்டனை அடையவில்லை. அவர் இளவரசரை மணந்து எங்களிடம் கருணை காட்டச் சொன்னார்.



இதை நாங்கள் மறக்க முடியுமா?'' என்றார்கள்.

யசனும் ''நீங்கள் சுசிம்மன் பாடலி புத்திரத்திற்கு வருவதைத் தாமதப் படுத்த வேண்டும்'' என்றான். அப்போது ஒரு நடன மாது ''ஓ! அதைச் சுலபமாகச் செய்துவிடாலம். அசோகர் எங்களைக் கொன்றுவிட்டார் என்றே அவன் நம்பிக் கொண்டிருக்கிறான். அதனால் நாங்கள் போய் அவன் முன் நின்றால் நாங்கள் பிசாசாகி வந்திருப்பதாக எண்ணி பயந்து போய் விடுவான்'' என்றாள்.

யசனும் ''அப்படி அவன் எண்ணி பயந்து போய் இறந்து விட்டால் மிகவும் நல்லதே. ஆனால் நீங்களும் அவன் மனதில் நீங்கள் பிசாசுகளே என்ற பயத்தை ஏற்படுத்தி விட வேண்டும். இனி நீங்கள் விரைவில் செயல்

பட வேண்டும். உங்களுக்குத்தான் குதிரைகளின்மீதமர்ந்து நன்கு சவாரி செய்யத் தெரியுமே. உங்களுக்காக நான் இரண்டு குதிரைகளைத் தேர்ந் தெடுத்து வைத்திருக்கிறேன். அவை காற்றினும் வேகமாகச் செல்லக் கூடியவை. நீங்கள் அவற்றில் அமர்ந்து தட்ச சீலத்திற்கு புறப்பட்டுச் செல்ல வேண்டும். உங்களைக் குறுக்கு வழி யில் அழைத்துச் செல்ல சிலரை ஏற் பாடு செய்திருக்கிறேன். இங்கிருந்து அரசாங்க தூதர்கள் தட்சசீலத்தை அடைவதற்கு முன் நீங்கள் அங்கே போய்ச்சேர்ந்து விட வேண்டும். அவர் கள் நாளைக்குக் காலையில்தான் அங்கிருந்து புறப்படப் போகிறார்கள். அதனால் நீங்கள் இன்றிரவே இங் கிருந்து கிளம்பிப் போக வேண்டும்'' என்றான்.

அப்போது ஒரு நடன மாது ''இன் றிரவே கிளம்ப வேண்டுமா? மழை பெய்து கொண்டிருக்கிறதே'' என் றாள். யசனோ ''ஆம்! இன்றிரவே செல்ல வேண்டும். உங்களது முயற்சி யால்தான் நம் நாடு பொற்காலத்தைக் காணப் போகிறது. அசோகர் மன்ன ராக அரியாசனத்தில் அமரப் போகி றார். அந்த நாள் சமீபத்தே விட்டது'' என்றான்.

நடன மாதுகளும் ''நாங்கள் இதைச் செய்து முடிக்கிறோம். ஆனால் நாங்கள் இப்படிச்செய்தோம் என்பதை விதிஷா தேவி கேள்விப் பட்டால் அவர் ஒரு நாளும் எங்களை மன்னிக்கமாட்டார். ஆனாலும் நாங் கள் அசோகருக்குப் பட்டிருக்கும் நன் றிக்கடனைச் செலுத்தியே ஆக வேண் டும்'' என்றாள்.

யசனும் ''உங்களுக்குத்தான் சாகசச் செயல்கள் மிகவும் பிடிக்குமே. பல மாதங்கள் அமைதியான வாழ்வை நடத்தி வந்தீர்கள். இது விதிஷா தேவி யால் நிகழ்ந்தது. ஆனால் இனி நீங்கள் முன்னைப் போலச் செயல்படப் போகிறீர்கள்'' என்று சிரித்துக் கொண்டே கூறினான்.

அவர்களும் ''முன்னைப் போலவா? அது கொஞ்சம் சிரமமே. ஏனெனில் விதிஷா தேவியார் தாம் எங்களை மாற்றி விட்டார்களே. அத னால் என்ன! நாங்கள் முயன்று முந் தைய முறைகளையே கடைப் பிடித் துப் பார்க்கிறோம்'' என்றனர்.

**(தொடரும்)**






# யார் உயர்ந்தவன்?

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தில் ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அவன் அதைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே நீ இந்த பயங்கர இரவில் ஏன் இப்படி சிரமப் படுகிறாய்? நீ எவ்வளவோ சாஸ்திரங்களைப் படித்திருக்கிறாய். ஒருவன் எவ்வளவு சாஸ்திரங்களைப் படித்திருந்தாலும் அவனுக்கு அனுபவ அறிவு இருக்க வேண்டும். இது இல்லாவிட்டால் அவன் பாடு திண்டாட்டமாகி விடும். உனக்கு அவ்வித அனுபவ அறிவு இருக்கிறதா அல்லது இல்லையா என்பது பற்றி எனக்குத் தெரியாது. இது பற்றி சங்கரன், சாரங்கன் என்ற இரு அறிவாளிகளைப் பற்றிய கதை கூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று கூறி கதை சொல்ல ஆரம்

## வேதாளம் சொல்லும் கதை



பித்தது.

சந்தனபுரத்தில் சங்கரன் என்ற பணக்காரன் இருந்தான். தந்தை விட்டுப் போன சொத்தை வைத்துக் கொண்டு அவன் சுகமாகக் காலம் கழித்து வரலானான். ஆயினும் அவன் எல்லா சாஸ்திரங்களைப் படித்து பண்டிதர்களிடம் தெரியாதனவற்றையும் சந்தேங்களையும் கேட்டுப் புரிந்தும் கொண்டான். இவ்வாறு அவன் எல்லாம் கற்றுணர்ந்தவனாக ஆகிவிட்டான்.

அவன் இக்காரணத்தால் பிறருக்கு அறிவு குறைவு என்றும் அவர்கள் செய்யும் எந்தச் செயலில் ஏதாவது குற்றம் குறைகளைக் கண்டு பிடித்துக் கூற நினைப்பான். ஆனால் அது சாஸ்திரசம்மதமான என யோசிப்பான். சங்கரன் பணக்காரனாதலால் அவனிடம் யோசனை கேட்கப் பலர் வரலாயினர். அவர்கள் தம் பிரச்னைகளை அவனிடம் கூறினால் முதலில் அவன் அவற்றிலுள்ள குறைகளைத் தான் காண்பான். பிறகு அவன் அவர்கள் கூறுவது சாஸ்திரத்திற்கு விரோதமானது என்று கூறி அனுப்பி விடுவான். அவர்கள் யோசனை கேட்கும் நோக்கமே சங்கரன் தமக்கு ஏதாவது பண உதவி செய்வான் என்பது தான்.

ஒருமுறை வீரப்பன் என்பவன் அவனிடம் வந்து ''ஐயா! என் பெண்ணிற்குக் கல்யாணம் பேசி முடித்திருக்கிறேன். ஆறு மாதங்களுக்குப் பிறகு கல்யாணத்தை நடத்திக் கொடுக்கிறேன் என்றேன். அப்போதுதான் நான் எதிர்பார்க்கும் பணமும் கிடைக்கும். ஆனால் பிள்ளை வீட்டார் இரண்டு வாரங்களுக்குள் கல்யாணத்தை நடத்திக் கொடுக்கும்படி வற்புறுத்துகிறார்கள். கல்யாணத்திற்கு ஐயாயிரம் வராகன்கள் செலவாகும். என்னிடம் இருப்பதோ இரண்டாயிரம் வராகன்களே. இந்த நிலையில் யார் மனமும் புண்படாமல் எப்படிக் கல்யாணத்தை நடத்துவது?'' என்று கேட்டான்.

சங்கரனும் ''இன்னும் ஆறு மாதங்களுக்கு ஒரு முகூர்த்த நாள் கூட இல்லை என்று சாஸ்திரம் கூறுகிறதே. இதைப் பிள்ளை வீட்டாரிடம் கூறு'' என்றான். வீரப்பனும் ''இந்த விஷயம் அவர்களுக்கும் தெரியும். அதனால் இப்போது கல்யாணத்தை நடத்தி விட்டு ஏதாவது சாந்தி ஹோமம் செய்து விடலாமென்று கூறுகிறார்கள். எப்படியும் இரண்டு வாரங்களுக்

குள் விவாகம் நடந்தே ஆக வேண்டு மென்று அவர்கள் பிடிவாதமாய்க் கூறு கிறார்கள்'' என்றான்.

சங்கரன் அது கேட்டு எதுவும் கூறாதிருக்கவே வீரப்பனும் ''மாப் பிள்ளைப் பையன் கண்ணுக்கு லட் சணமாய் இருக்கிறான். நல்ல சொத்து இருக்கிறது. இது நல்ல சம்மந்தம். இதை நழுவ விட்டால் இது போல வேறொரு இடம் கிடைக்காது. நல்ல முகூர்த்தம் என்பதை விட நல்ல சம் மந்தம் என்பது எவ்வளவோ மேல். நானும் பிள்ளை வீட்டார் விருப்பப் படியே திருமணத்தை நடத்தி விட நிச்சயம் செய்து விட்டேன். நீங்கள் எனக்குப் பணம் கொடுத்து உதவுவீர் களா?'' என்று கேட்டான்.

சங்கரனும் ''இந்தத் திருமணத்தை நீ ஆறு மாதங்களுக்குள் நடத்துவதே சாஸ்திரத்திற்கு விரோதம். இது தெரிந் திருந்தும் விவாகத்தை நடத்தி விட்டுப் பரிகாரம் செய்வதாகக் கூறுகிறாய். இப்படிப் பரிகாரம் செய்வதும் சாஸ் திரத்திற்கு விரோதம். இப்படிச் செய் யும் உனக்கு நான் உனக்கு எவ்வகையி லும் உதவ மாட்டேன்'' என்றான். அப் போது வீரப்பன் ''ஐயா, ரங்கபுரசாரங் கன் தங்களை விட சாஸ்திரங்கள் படித்தவர். சாஸ்திரத்தின்படி நடக் காமல் என் மகளின் நல்வாழ்விற்கு வழி செய்யும் என்னைப் பாராட்டி னார். நீங்கள் இப்படிச் சொல்வது வேடிக்கையாக உள்ளது'' என்று கூறி விட்டுச் சென்றான்.

தான் சொன்னது சரியல்ல எனக் வீரப்பன் கூறியது பற்றி சங்கரன் யோசித்துக் கொண்டிருக்கையில் சந்திரன் என்பவன் அவனைக் காண



வந்தான். அவன் ஒரு வீட்டை வாங் கப் போகிறானாம். அவ்வூருக்கு வெளியே ஒரு பெரிய நல்ல வீடு விலைக்கு வந்துள்ளதாம். விலையும் அதிகமில்லை. ஆனால் வீட்டின் பின்புறம் நிறைய தென்னை மரங்கள் உள்ளன. தென்னை மரம் சந்திரனின் குடும்பத்திற்குக் கெடுதல் விளை விக்குமாம். தென்னை நாற்றை நட்ட தும் அவனது தாத்தா இறந்து விட்டா ராம். அவன் தகப்பனாரும் உடல் நல மில்லாமல் படுத்து விடவே அந்தத் தென்னங்கன்றைப் பிடுங்கி எறிந்த தும் அவர் குணமடைந்து விட்டாராம். இதனால்தான் தென்னை மரங்க ளுள்ள அந்த வீட்டை வாங்கத் தயக்க மாம்.

சங்கரனும் ''நல்ல முகூர்த்தம் பார்த்து வீட்டை வாங்கி விடு.



தென்னை மரம் யாருக்கும் கெடுதல் செய்யாது என்று சாஸ்திரமே சொல் கிறது. இளநீர் குடிப்பது ஆரோக்கி யத்தை அளிக்கும். அதனால் மூட நம்பிக்கையில் நல்ல வீட்டை விட்டு விடாதே'' என்றான்.

சந்திரனோ ''அந்த வீட்டை முத லில் நீங்கள் வாங்கி கொல்லைப் புறத் திலுள்ள தென்னை மரங்களை வெட்டி விட்டு அந்த வீட்டை எனக்கு விற்று விடுங்கள்'' என்றான். சங்க ரனோ ''காய்களைக் கொடுக்கும் மரங் களை வெட்டக் கூடாது என்று சாஸ் திரம் கூறுகிறது. நான் அந்த வீட்டை வாங்கி தென்னை மரங்களை வெட்டி விட்டு உனக்கு விற்பது சாஸ்திரத் திற்கு விரோதம். நான் அவ்வாறு செய்யக் கூடாது. அதனால் உனக்கு நான் உதவ மாட்டேன்'' என்றான்.

சந்திரனும் ''நீங்கள் இப்படிச் சொல் கிறீர்கள். ஆனால் ரங்கபுர சாரங்கன் நான் என் குடும்பத்தின் நலனை முக் கியமாகக் கருதுவதை வெகுவாகப் பாராட்டினார்'' என்று கூறி விட்டுச் சென்றான்.

இவ்வாறு இருவர் ரங்கபுர சாரங் கனைப் பற்றி உயர்வாகக் கூறிய தால் சங்கரனுக்கு அவனைப் பற்றி விவரங்கள் தெரிந்து கொள்ள வேண்டுமென்ற ஆவல் ஏற்பட்டது. அதனால் ரங்கபுரத்திற்குப் போக அவன் நினைத்த போது அவனைக் காண ஒரு யோகி வந்தார்.

சங்கரன் அவரை மரியாதையுடன் வரவேற்று உபசரித்தான். பிறகு அவன் ''சுவாமி! நான் எல்லா சாஸ் திரங்களையும் படித்தவன். என் அறிவு எவ்வளவு என்று தாங்கள் கூற வேண் டும்'' என்றான். யோகியும் ''அப்பனே! சாஸ்திரங்களைப் படிப் பது அறிவை வளர்த்துக் கொள் ளவே. ஆனால் அந்த வளர்ச்சி எவ் வளவு என்றெல்லாம் அளவிட முடி யாது. ஆமாம் நீ ஏன் உன் அறிவின் வளர்ச்சி எவ்வளவு என்று அறிந்து கொள்ள விரும்புகிறாய்?'' என்று கேட்டார்.

சங்கரனும் ''நான் படித்த சாஸ்தி ரங்களால் பிறருக்கு உதவ நினைக் கிறேன். ஆனால் யாருக்கும் நான் சொல்வது பிடிக்கவில்லையே'' என்று கூறித் தன்னிடம் வந்த வீரப்பனை யும், சந்திரனையும் பற்றிக் கூறினான். அது கேட்டு யோகி சிரித்து ''ஒருவன் எவ்வளவுதான் சாஸ்திரங்களைப் படித்திருந்தாலும் அவனுக்கு அனு பவ ஞானம் என்பது வேண்டும். அது

ஒருவனுக்கு அவன் இயல்பைப் பொறுத்துக் கிடைப்பது. சாஸ்திரங்களைப் படித்ததோடு உன் அறிவையும் பயன்படுத்தி பிறரிடம் பழகு. பிறர் உன்னிடம் உதவி கோரி வந்தால் அவர்களது தேவைகளை அறிந்து உதவ வேண்டுமேயல்லாது வெறும் யோசனைகளை மட்டும் கூறி அனுப்பக் கூடாது என்று சாஸ்திரம் கூறுகிறது'' என்றார். சங்கரனும் ''அறிவில்லாதவர்களுக்கு உதவ சாஸ்திரம் படித்தவன் ஒப்ப மாட்டான். அந்நிலையில் அவன் யோசனைகளைத் தானே கூற முடியும்?'' என்றான். யோகியும் குறுநகை புரிந்தவாறே ''உதவி புரியாதவனைப் புகழக்கூடாதென சாஸ்திரம் கூறுகிறதே'' எனவே சங்கரனும் ''முட்டாள்களுக்கு உதவாதே என்றும் சாஸ்திரம் கூறுகிறதே'' என்றான்.

அப்போது யோகி ''அப்படியானால் கேள். இது பற்றி விவரமாக நீ அறிய விரும்பினால் ரங்கபுரத்திலுள்ள சாரங்கனைப் பார்த்து வா. அனுபவ ஞானம் என்பது ஒருவர் கற்றுக்கொடுத்து வருவதல்ல. எனவே நீ அவனை நன்கு கவனித்து அது பற்றித் தெரிந்து கொள்'' என்று கூறி விட்டுச் சென்றார்.

யோகியும் சாரங்கனின் பெயரைக் கூறவே சங்கரன் ரங்கபுரத்திற்குப் போய் சாரங்கனைப் பார்ப்பது என்று தீர்மானித்து மறுநாளே ரங்கபுரத்திற்குக் கிளம்பிச் சென்றான். ரங்க புரத்தில் சாரங்கனின் வீடு மிகப் பெரியதாக இருப்பதை அவன் கண்டான். அங்கு ஒரு பெரிய அறையில் விரிப்பு விரிக்கப் பட்டிருந்தது. அறையின் நடுவே



சாரங்கன் விரிப்பின் மீது அமர்ந்திருந்தான். அவனருகே மாருதி என்ற பதினைந்து வயது பையன் உட்கார்ந்திருந்தான்.

மாருதியின் வலது கையில் ஒரு புல்லாங் குழல் இருந்தது. மடியில் ஒரு புத்தகத்தை வைத்திருந்தான். அவனருகே ஒரு பெரிய கரும்பலகையும், சுண்ணாம்புக் கட்டியும் இருந்தன. சாரங்கனின் முன்னால் சற்றுத் தள்ளிப் பலர் அமர்ந்திருந்தார்கள். சங்கரன் அங்கே போன போது ஒரு கவிஞர் சாரங்கனிடம் ''இயற்கையின் சக்திகளே மனிதனை ஆட்டிப் படைக்கின்றன. அவைதாம் நாம் விரும்பனவற்றை வரங்களாக அளிக்கின்றன. அதனால்தான் நான் என் படைப்புகளை வெண்ணிலவிற்கும், சலசலவென பாயும் ஆற்றிற்கும், மலரும்



மலர்களுக்கும் கூறி வருகிறேன். ஆனால் இதுவரை அதனால் எனக்கு எவ்விதப் பலனும் கிடைக்க வில்லையே'' என்றார்.

அப்போது சாரங்கன் மாருதியைப் பார்த்து ''தம்பி! உன் புத்தகத்திலிருந்து ஒரு நல்ல பாடலைப் படித்துக்காட்டு அப்போது எனக்கு அது ஊக்கம் அளிக் கும்'' என்றார். அப்போது மாருதிதான் எழுதிய ஒரு பாடலை உரக்க வாசித் தான். அதில் பொருளும் இருக்க வில்லை. உணர்ச்சி ததும்பவும் இல்லை.

ஆனால் சாரங்கனோ ''ஆகா! எவ் வளவு பொருத்தமாகக் கூறினாய்! தெய்வாம்சம் பொருந்திய அந்த அனுமாரின் பெயரான மாருதி என்பதை உனக்கு வைத்தது மிகவும் பொருத்தமே'' என்று கூறினார்.

பிறகு அவர் கவிஞரைப் பார்த்து ''ஐயா! இயற்கை அன்னை உங்கள் கவிதைகளைக் கேட்க வேண்டு மென்ற உயரிய எண்ணம் நீங்கள் கொண்டிருக்கிறீர்கள். உங்களைக் காணும் பெரும் வாய்ப்பு எனக்குக் கிடைத்ததே என் அதிர்ஷ்டம். நீங் கள் எதிர்பார்க்கும் பலனைக் கூற எனக்குத் தகுதியா இருக்கிறது?'' என் றான்.

கவிஞர் அதனால் திருப்தி அடைந்து அங்கிருந்து சென்றார். அப் போது ஒரு விவசாயி சாரங்கனிடம் ''ஐயா! வருடா வருடம் வயலில் நன்கு விளைச்சலைக் காண்கிறேன். தானியம் களஞ்சியத்திலும் நிறைந்து விடுகிறது ஆனால் நாளுக்கு நாள் தானியத்தின் விலை அதிகரித்துக் கொண்டே போவதால் எப்போது தானியத்தை விற்பது என்றே தெரிய வில்லை நஷ்டப்படாமல் என் தானி யத்தை எப்போது நான் விற்க வேண் டும்?'' என்று கேட்டான்.

அப்போது சாரங்கன் மாருதியைப் பார்க்கவே அவனும் சுண்ணாம்புக் கட்டியால் கரும் பலகை மீது கோமாளி போன்ற ஒரு படத்தை வரைந்தான். அதைக் கண்ட சாரங்கன் ''உள்ளது உள்ளபடியே படம் வரை வது ஒன்றும் சிரமமில்லை. இந்த விவசாயி தம் மனதை எப்படிக் குழப் பிக் கொண்டிருக்கிறார் என்பதை இந்தப் படம் காட்டுகிறது'' எனக்கூறி ஓரிரு நிமிடங்கள் கண்ணை மூடிக் கொண்டான். பிறகு கண்களைத் திறந்து கொண்டு ''பஞ்சம் வந்தால் தானியத்தின் விலை இன்னும் அதி கரிக்கும். அயல் நாட்டிலிருந்து தானி

யத்தை இறக்குமதி செய்தால் நம் பணம் அந்நாட்டிற்குப் போய் விடும் அவ்வாறு நடக்க விடாமல் நீ இப்போது தடுத்திருக்கிறாய். இது நீ நாட்டிற்குச் செய்த நற்பணி. இப்படிப்பட்ட மகானைக் காண்பதே நான் செய்த மாபெரும் பாக்கியம். அதனால் எப்போது விற்பது என்று உனக்கு நான் சொல்வதா?'' என்றார்.

விவசாயியும் மகிழ்ச்சி அடைந்து அங்கிருந்து சென்றான். அப்போது ஒரு பெண் எழுந்து நின்று ''ஐயா! நான் என் குழந்தைகள் தவறு செய்தால் மன்னித்து விடுகிறேன். ஆனால் வேறு குழந்தைகள் என் குழந்தைகளை விட சாமர்த்தியமாக இருப்பதை என்னால் சகிக்க முடிகிறதில்லை. நான் சந்தோஷமாக இருக்க என்ன செய்ய வேண்டும்?'' என்று கேட்டாள்.



சாரங்கன் மாருதியிடம் குழலை எடுத்து ஊதும்படிச் சைகை செய்தான். அவனும் அபஸ்வரமாக வாசித்தான். சாரங்கனும் ''இது மாதிரி ஸ்வர கற்பனை எந்த வித்வானுக்கும் வந்ததில்லை. தெய்வாம்சம் பொருந்திய உனக்கு இது ஒரு பெரிய வேலையா?'' என்று கூறி விட்டு அந்தப் பெண்ணைப் பார்த்து ''பெண்கள் தம் குழந்தைகளின் தவறுகளை மன்னித்து அவர்களை உயர்வாகவே கருதுகிறார்கள். நீங்கள் ஒரு உண்மையை தைரியமாக ஒப்புக் கொண்டிருக்கிறீர்கள். உங்களுக்குக் குழந்தைகளின் மேலுள்ள பாசத்தை எவ்வளவு பாராட்டினாலும் தகும். உங்களை சிரம் தாழ்த்தி வணங்குகிறேன்'' என்றார்.

இவற்றையெல்லாம் கேட்டுக்கொண்டிருந்த சங்கரன் இப்படியெல்லாம் கூறுவதால் மக்களுக்கு என்ன பயன் என்று ஆச்சரியப்பட்டான். அது பற்றி யோகியிடம் கேட்கலாம் என எண்ணி அவன் தன் ஊருக்குத் திரும்பி வந்தான். யோகியும் எங்கும் போகாமல் அதே ஊரில்தான் இருந்தார்.

சங்கரன் யோகியைக் கண்டு தான் கண்டதையும் கேட்டதையும் கூறி ''சுவாமி! அந்த சாரங்கனை மக்கள் ஏன் இப்படி புகழ்கிறார்கள் என்று எனக்குப் புரியவில்லை. அவர் எந்த சாஸ்திரத்தையும் படித்திருப்பதாகத் தெரியவில்லையே'' என்றான்.

அதைக் கேட்டு யோகி சிரித்து ''சங்கரா! நீ நினைப்பது போல சாரங்கன் சாஸ்திரங்களைப் படிக்காமல்

இல்லை. எல்லா சாஸ்திரங்களையும் கற்றவன். அத்தோடு அந்த சாரங்க னுக்கு அனுபவ ஞானம் என்பது அதிகம் உள்ளது. நீ போய் நிதானமாக யோசித்துப்பார். நான் மறுபடியும் இந்த ஊருக்கு அடுத்த வருடம் வரு வேன். அப்போது உன்னைப் பற்றித் நான் தெரிந்து கொள்கிறேன்'' என்று கூறி விட்டு அந்த ஊரை விட்டுச் சென் றார்.

வேதாளம். இக்கதையைக் கூறி ''யோகி சங்கரனை விட சாரங்கனை உயர்ந்தவனாகக் கருதினார் என்று தெரிகிறது. இதுதான் அவரது முடி வான அபிப்பிராயமா? சங்கரன் சாஸ் திரப்படி நல்லதை நல்லது என்றும் கெட்டதை கெட்டது என்று ஒளிவு மறைவில்லாமல் பிறருக்கு யோசனை கூறி வந்தான். சாரங்கனோ மக்கான மாருதியின் உதவியுடன் தன்னிடம் யோசனை கேட்க வந்தவர்களைப் புகழ்ந்து அனுப்பி வந்தான். அவர் களும் திருப்தி அடைந்து சென்றனர். யோகி சாரங்கனின் முறைதான் சரி என்று கூறுகிறாரா? என் இச்சந்தேகங் களுக்கு சரியான விடைகள் தெரிந்தும் நீ பதில் கூறாவிட்டால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகி விடும்'' என்றது.

விக்கிரமனும் ''இந்த இருவரிட மும் மக்கள் தம் பிரச்னைகள் தீரு மென்றே எண்ணி வருகிறார்கள். அவர்கள் யாவரும் நடுத்தர வர்க்கத் தினர். இவர்களுக்கு சாஸ்திரத்தில் என்ன சொல்லி இருக்கிறது என்றெல் லாம் சொல்வது வீணே. அவர்களது பிரச்னைகளுக்குத் தீர்வுகள் சொன் னாலே அவர்களுக்குத் திருப்தி ஏற் படும். சங்கரன் சாஸ்திரம் இதைச் சொல்கிறது, அதைச் சொல்கிறது என்று கூறி உதவ மறுத்தான். சாரங் கனோ பிரச்னைகளோடு வந்தவர் களுக்கு ஆறுதல் கூறி அவர்கள் மனம் மகிழச் செய்து அனுப்பி வைத்தான். இது சாரங்கனின் அனுபவ ஞானம். இதனால்தான் யோகி சாரங்கனை சங்கரனை விட உயர்ந்தவராகக் கரு தினார்'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதி லால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# புரியிலிருந்து சாந்திப்பூர் வரை

கருத்து: **மீரா நாயர்** ◆ ஓவியர்: **கோபகுமார்**




புரியின் ஜகன்நாதர் ஆலயத்திலிருந்து கோணார்க்கின் சூரிய தேவ ஆலயம் 32 கி.மீ. தொலைவில் உள்ளது. இதற்குப் போகும் கண்கவர் கடல் வழி, ஒருபுறம் வங்காள விரிகுடா வையும் மறுபக்கம் முந்திரி, சவுக்கு, யூகாலிபுடஸ், பனை ஆகிய தோப்புகளையும் பசுமையான வயல்களையும் கொண் டது.

இந்தக் கடற்கரையில் வசிப்பவர்கள் மீன் பிடித்தும், வயல் களில் நெல் சாகுபடி செய்தும் வருகிறார்கள். நெல் விதைப்பது, பின் அறுவடை செய்வது ஆகியவற்றை இங்குள்ளவர்கள் விழாக்களாகக் கொண்டாடுகிறார்கள். சிராபண் பூர்ணிமா என்பது நெல்விதைக்கும் போது கொண்டாடும் திருவிழா. அப்போது சிறுவர்கள் கம்புகளில் நின்று நடந்து நெற்பயிர் அவ்வளவு உயரத்திற்கு வளர வேண்டுமெனக் காட்டிக் குதூகலிக்கிறார்கள்.

சூரியதேவனின் கருங்கல் ரதத்தைக் கடலில் பல மைல்கள் தொலைவிலிருந்தே பார்க்கலாம். இது மிக மிகப் பெரியது. ஒரு காலத்தில் இது 60 அடி உயரமிருந்து மாலுமிகளுக்கு மிகவும் உதவியது. ஐரோப்பிய மாலுமிகள் இதைக் கருங்கோவில் என்று அழைத்தனர். ஏனெனில் புரியின் ஜகன்நாதர் ஆலயம் வெள்ளையாக இருந்ததனால்தான். இவ்விரண்டும் இப்பகுதியின் அற்புதப் படைப்புகள்.

**சிராவண பூர்ணிமாவில் நெல் விதைத்தல்**

புராணக் கதையின்படி கிருஷ்ணருக்கும் ஜாம்பவதிக்கும் பிறந்த சாம்பன் பெரு நோயால் வருந்தினான். அதனால் கிருஷ்ணர் அவனிடம் சூரிய தேவனை வழிபட்டு நோயைப் போக்கிக் கொள்ளும்படிக் கூறினார்.

சாம்பனும் பனிரெண்டு வருடங்கள் கடும் தவம் புரிந்து தன் நோயைப் போக்கிக் கொண்டான். தன் நன்றியைச் செலுத்தும் வகையில் அங்கு சூரியதேவனுக்கு ஆலயம் கட்டினான். அந்த இடத்திற்கு அருகில் ஓடும் சந்திரபாகா நதியிலிருந்து கிடைத்த சூரிய தேவரின் விக்கிரகம் அந்த ஆலயத்தில் பிரதிஷ்டை செய்யப்பட்டது. சந்திரபாகா நதி இப்போது ஒரு குளமாக இந்த ஆலயத்திலிருந்து மூன்று கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. மக்கள் மாசி மாதத்தில் கிருஷ்ண பக்ஷசப்தமி அன்று இந்தக் குளத்தில் நீராடி சூரிய தேவனின் ஆலயத்திற்குச் செல்கிறார்கள்.

கங்க வம்ச மன்னர் நரசிம்ம தேவர் அந்த சிறு ஆலயத்தை 13வது நூற்றாண்டில் மாபெரும் ஆலயமாகக் கட்டினார். 1200 ஆட்கள் வேலை செய்து 12 ஆண்டுகளில் இதைக் கட்டி முடித்தார்கள். இதைக் கட்டிய சிற்பி பிஸூ மகாரானா இதை அற்புதக் கோவிலாக உருவாக நினைத்தார். இதனால் தம் ஊரிலுள்ள மனைவியையும் மகனையும்மறந்து இந்த வேலையில் ஈடுபட்டார். அவருடைய மகன் தர்மபாதன் சிற்பக் கலையைக் கற்றுக் கொண்டு தன் தந்தையைத் தேடிக் கொண்டு கோணார்க்கை வந்தடைந்தான்.

பிஸூ மகாரானா அநேகமாக அந்த ஆலயத்தைக் கட்டி முடித்து விட்டார். ஆனால் ஒரு சிறு தவறின் காரணமாக கோபுர மேல் தளத்திற்கு அவரால் அங்கு வைக்கப்பட வேண்டிய பெரிய கல்லை ஏற்ற முடியவில்லை. இதனால் கோவில் கட்டி முடிக்கப் படாததால் மன்னன் கோபம் கொண்டான்.

**கோணார்க்கின் சூரியதேவ ஆலயம்**



அப்போதுஅங்கு வந்த தர்மபாதன் தன் தந்தை செய்த தவறைச் சுட்டிக் காட்டி அதை சரி செய்து கல்லை மேலே ஏற்றி விடவே கோபுர வேலையும் நொடியில் முடிந்து கோவில் கட்டி முடிக்கப்பட்டு விட்டது!

இப்போது அந்த கோபுரம் இல்லாது ஆலயம் மொட்டையாக உள்ளது. கோபுரம் இல்லாமலும் இப்போது ஆலயத்தின் உயரம் 40 அடியாக உள்ளது. இந்த ஆலயம் சூரிய தேவனின் ரதம் போல அமைக்கப்பட்டுள்ளது. இதன் பனிரெண்டு ஜதை சக்கரங்கள் பனிரெண்டும் மாதங்களை (24 பக்ஷங்கள்) குறிக்கின்றன. ஒவ்வொரு சக்கரத்திலும் 16 ஆரங்கள் உள்ளன. இவை ஒரு நாளின் 16 பிரகரங்களைக் குறிக்கின்றன. அக்காலத்தில் 24 மணி கொண்ட நாளை 16 பிரகரங்களாகத்தான் பிரித்திருந்தார்கள். இவை தம் நிழலால் ஒரு கடியாரம் போலச் செயல்படுகின்றன.

நூற்றுக் கணக்கான ஆண்டுகளாக இந்த ஆலயம் கவனிப்பாரற்றுப் பாழடைந்து கிடந்தது. இந்த நூற்றாண்டில் இதனைத் தூர் வாறி மணலையும் கற்களையும் அப்புறப் படுத்தியதும் இதன் கம்பீரத் தோற்றம் வெளிப்பட்டது. உலகின் பழங்காலப் பெருமை பெற்ற இடமாக ஐக்கிய நாடுகள் கல்வி கலாசார அமைப்பு இதனை அறிவித்துள்ளது.

இங்கிருந்து சற்று தூரம் வடக்கே போனால் பாரா தீப் துறைமுகத்தை அடைகிறோம். இது நாட்டின் பெரிய துறைமுகம். சுதந்திரத்திற்குப் பின் கிழக்குக் கடற்கரையில் அமைக்கப்பட்ட முதலாவது துறைமும் இது. இங்கு கண்கவர் கடற்கரை உள்ளது. இங்கு கடலிலிருந்து பெரிய ஆமைகள் ஆயிரக் கணக்கில் கரைக்கு வந்து முட்டையிடுகின்றன. ஒரு சில ஆமைகள் தென் அமெரிக்காவிலிருந்து கூட வருகின்றனவாம்.



உலகில் மிக அதிக அளவில் ஆமைகள் கஹிமட்டா சரணாலயத்தில் மிக உயரமான இடத்தில் வைக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு ஆண்டிலும் ஜனவரி பிப்ரவரி மாதங்களில் பத்து லட்சம் ஆமைகள் இக்கடற்கரைக்கு வந்து முட்டைகளை இடுகின்றன. ஒரு வகை அபூர்வ ஆமை வகையில் 30,000 ஆமைகள் இந்த சரணாலயத்தில் காணக் கிடைக்கின்றன.



பகா ஜெதீன்

நாம் இன்னும் சற்று வடக்கே போனால் பாலேஷ்வர் எனப்படும் பாலாஸோர் என்ற துறைமுகத்தை அடைகிறோம். இது ஆங்கிலேயர்களால் 1642ல் அமைக்கப்பட்ட துறைமுகம். இங்குதான் ஜதீந்திரநாத் முகர்ஜி என்ற புரட்சிக்காரர் ஆங்கிலேயரால் சுட்டுக் கொல்லப்பட்டார். பகா ஜதீன் என அழைக்கப்பட்ட இவர் 1915ல் இங்கு வந்த மாவெரிக் என்ற ஜெர்மானியக் கப்பலிலிருந்து ஆயுதங்களையும் வெடி குண்டுகளையும் எடுத்து வரச் சென்ற போது இடை மறிக்கப்பட்டுக் கொல்லப்பட்டார்.

பாலாஸோர் மாவட்டத்திலுள்ள சாந்திப்பூரின் கடற்கரை புகழ் பெற்றது. இங்கு கரை ஐந்து கிலோ மீட்டர் தூரம் கடலுக்குள் சென்றுள்ளது. இதன் மீது அலை அடிக்கும் போது நிலவு இரவுகளில் மணல் பரப்பு மின்ன சாந்திப்பூர் என்னும் சொல்லின் ஊரின அர்த்தமான 'வெள்ளை நிலா ஊர்' என்பதை உறுதிப்படுத்துகிறது.

முட்டையிட்டு வளரும் வேளை



# சொந்த ஊர் பாசம்

வெகு காலத்திற்கு முன் ஒரு மா பெரும் சிற்பி இருந்தார். அவர் பல அழகிய மாளிகைகளையும் மண்டபங்களும், ஆலயங்களும் கட்டிக் கொடுத்துப் புகழ் பெற்றவர். அவருடைய புகழ் பூவுலகில் மட்டு மல்லாது பாதாள, சொர்க்க லோகங்களிலும் பரவியது.

அச்சமயத்தில் நாகலோகத்தில் நாக மன்னனின் அரண்மனையில் பல இடங்களில் விரிசல் கண்டன. அதனால் புதிய அரண்மனையை நிர்மாணிக்க நினைத்து நாக மன்னன் பூலோகத்திலிருந்து மாபெரும் சிற்பியை அழைத்து வரத் தீர்மானித்தான். நாக மன்னனின் ஆட்கள் பூவுலகிற்கு வந்து அந்த சிற்பியிடம் விஷயத்தைக் கூறியதும் சிற்பியும் தான் வெகு அழகிய அரண்மனையைக் கட்டிக் கொடுக்கப் போவது பற்றி எண்ணி மகிழ்ந்து அவர்களுடன் நாகலோகத்திற்குச் சென்றார்.

நாக மன்னனுக்கும் சிற்பிக்குமிடையே விரைவிலேயே நெருங்கிய நட்பு ஏற்பட்டது. சிற்பிக்கு அம் மன்னன் எல்லா வசதிகளையும் செய்து கொடுத்தான். ஆனாலும் சிற்பிக்கு அவ்வப்போது தன் சொந்த ஊரின் நினைவு வரலாயிற்று அவன் தன் குடிசையில் தன் தாயும் மனைவி யும் எப்படி இருக்கிறார்கள் என்று எண்ணிக் கவலைப் படலானான்.

ஒருநாள் நாக மன்னனிடம் ''அரசே எனக்கு என் ஊரின் நிலை பற்றி அறிய ஆவலாக உள்ளது. அது பற்றித் தெரிந்து வரச் செய்வீர்களா?'' என்று கேட்டான். நாக மன்னனும் ''இது பற்றி எனக்கே தெரியும். உன் ஊர் மழை பெய்யாமல் கடும் பஞ்சத்தில் சிக்கியுள்ளது. உன் ஊரைச்சுற்றியுள்ள பல ஊர்களிலும் அதே நிலைதான்'' என்றான். சிற்பியும் ''அப்படியானால் உங்கள் சக்தியால் அங்கு மழை பெய்யும்படிச் செய்யுங்கள்'' என்று வேண்

—சங்கர சுவாமிநாதன்—




டினான்.

நாக மன்னனும் ''அதை நான் செய்ய் கூடாது. ஏனெனில் அப்பகுதி பஞ்சத்தால் வாட வேண்டுமென்று முன் கூட்டியே நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. இன்னும் நூறு நாட்களுக்கு என்னால் எதுவும் செய்ய இயலாது'' என்றான். அது கேட்டு சிற்பி துடித்துப் போனான். தன் தாய், மனைவி, உறவினர் மற்றும் தன் ஊரில் உள்ளவர்களெல்லாம் தண்ணீருக்கும் உணவிற்கும் தவித்துப் போவார்களே என எண்ணி அந்த சிற்பி கண்கலங்கினான்.

அவன் நாக மன்னனிடம் ''அரசே! என் ஊரில் மழை பெய்யச் செய்யுங்கள். எனது மனைவியும் தாயும் என் ஊராரும் துடிதுடிக்க நான் மட்டும் இங்கு சுகமாக வாழ விரும்பவில்லை. உங்களுக்கு இந்த மாதிரி ஒரு நிலை ஏற்பட்டால் நீங்கள் கைகட்டிக் கொண்டு சும்மாவா இருப்பீர்கள்?'' என்று கேட்டான்.

நாக மன்னனோ ''எதற்கு வெட்டிப் பேச்சு. உன் ஊரும் அதைச்சுற்றியுள்ள பகுதியும் பஞ்சத்தால் வாட வேண்டுமென முன்கூட்டியே நிர்ணயிக்கப்பட்டிருப்பதால் என்னால் எதுவும் செய்ய முடியாது'' என்றான். அப்போது சிற்பி ''நானும் என் வேலையை இந்நிலையில் செய்ய முடியாது. ஒரு தடவை என் ஊருக்குப் போய் அங்குள்ள நிலையைப் பார்த்த பிறகே என்னால் எதையும் செய்ய இயலும்'' என்றான்.

நாகராஜன் கோபம் கொண்டு தன் ஆட்களை அழைத்து ''இவனை சிறைச்சாலையில் அடையுங்கள்'' என்று கட்டளை இட்டான். சிற்பியும் ''இதற்கு நான் பயப்பட மாட்டேன். என் ஊரில் நீங்கள் மழை பெய்யும் படிச் செய்தாலே என்னால் இங்கு வேலை செய்ய முடியும்'' எனத் துணிச்சலுடன் கூறினான்.

நாக மன்னனும் ''இது பற்றி முன்பே நிர்ணயிக்கப்பட்டதை மாற்ற முடியாது என்று நான்தான் சொல்லி விட்டேனே'' என்றான். சிற்பியும் ''அப்படியானால் இனிமேல் என்னால் இந்த அரண்மனையை கட்டவும் முடியாது'' என்றான். அப்போது நாகமன்னன் ''அப்படியா? அப்போது நான் உன் தலையை வெட்ட'' எனக் கூறிப் பாதியில் நிறுத்தினான். ஏனெனில் சிற்பியைக் கொன்று விட்டால் கட்டட வேலை பாதியில் நின்று விடுமே என்பது அப்போது சட்டென அவன் நினைவிற்கு வந்தது. அதனால்

நாக மன்னன் அவனை எதுவும் செய்யாமல் விட்டு வைத்தான்.

இதனால் சிற்பிக்கு எவ்விதப் பயனும் ஏற்படவில்லை. அவனால் நாக லோகத்திலிருந்து தன் ஊருக்குப் போய் அங்குள்ள நிலைமையைத் தெரிந்து கொள்ள முடியவில்லை. இதற்கு என்ன வழி என்று யோசிக்கலானான். அப்போது அவனுக்கு அதற்கான வழி தெரிந்து விட்டது. அவன் அந்த மாளிகையில் அமைத்த ஒரு பெரிய மரத் தூணை ரம்பம் கொண்டு மத்தியில் அறுக்கலானான்.

தூண் அறுபடுகையில் அந்த அரண்மனை முழுவதுமே ஆடலாயிற்று. அது கண்டு அரண்மனையே இடிந்து விழுந்து விடுமோ என்று பயந்த நாக மன்னன் ஓடோடி வந்து ''நிறுத்து! ஏன் இப்படிச் செய்கிறாய்?'' என்று கேட்டான். சிற்பியும் ''என் ஊரில் மழை பெய்யச் செய்வதாக வாக்களித்தாலே நிறுத்துவேன். இல்லாவிட்டால் இந்த அரண்மனை இடிந்து விழுந்து விடும்'' என்றான்.

நாக மன்னனும் ''நீ கூறியபடியே உன் ஊரில் மழை பெய்யச் செய்கிறேன்'' எனவே சிற்பியும் ''அப்படி வாருங்கள் வழிக்கு. மழை போதிய அளவிற்கே பெய்ய வேண்டும். அப்படிச் செய்தால் நான் கட்டி முடிக்கும் அரண்மனை இந்திரனைக் கூடப் பொறாமை கொள்ளும் படி செய்யும்'' என்றான். அப்போது நாக மன்னன் தன் அங்கவஸ்திரத்தை எடுத்து சிற்பியின் மீது போர்த்தி ''நீயே உன் ஊருக்குப் போய் அங்கு போதிய மழை பெய்வதைப் பார்த்து விட்டு வா'' என்று கூறி அனுப்பினான்.

சிற்பி பூவுலகில் தன் ஊருக்குச் சென்றான். அங்கு மழை பெய்வதையும் அதனால் மக்கள் மனம் குளிர்ந்து மகிழ்வதையும் நேரில் கண்டான். ஆனால் அந்த ஊர்க்காரர்கள் அவனைப் பார்க்கவில்லை. அவர்



களுக்குத் தென் பட்டதெல்லாம் ஒரு பெரிய பாம்பே!! அவர்கள் ''ஆகா! எவ்வளவு பெரிய பாம்பு! இது வந்ததால்தான் நம் ஊருக்கு மழையே வந்தது என்று கூறி இதற்கு நாம் கோவில் கட்டி வணங்குவோம்'' என்றார்கள். உடனே கோவிலும் கட்டப் பட்டது. அப்பகுதியில் பஞ்சமும் அகன்றது.

சிற்பி நாகலோகத்திற்குத் திரும்பிப் போய் நாக மன்னனிடம் ''என்னைப் பாம்பாக மாற்றித்தானே என் ஊருக்கு அனுப்பினீர்கள்? அங்கு நான் யாருட னும் பேச முடியவில்லையே'' என்றான். நாக மன்னனும் ''நீ பிடிவாதக் காரன். அதனால் முன்னெச்சரிக்கை யாக அப்படிச் செய்தேன். நான் என் வாக்கை நிறைவேற்றி விட்டேன். இனி நீ அரண்மனையைக் கட்டி முடி'' என்றான்.

சிற்பியும் நாக மன்னனின் அரண் மனையை அற்புதமாகக் கட்டி முடித் தான். கிரகப் பிரவேசத்திற்கு வந்த இந்திரன் அதைக் கண்டு பிரமித்துப் போனான். நாக மன்னன் சிற்பிக்கு விலையுயர்ந்த பல பரிசுகளைக் கொடுத்து அவனது ஊருக்கு அனுப் பினான்.

சிற்பியைக் கண்டதும் பலர் ''இவ் வளவு நாட்களாக நீ எங்கே போயிருந் தாய்? நீ இல்லாத போது இங்கு கடும் பஞ்சம் ஏற்பட்டது. ஒரு பெரிய பாம்பு வந்து மழை பெய்யச் செய்து பஞ்சத் தைப் போக்கியது. அந்தப் பாம்பிற்கு ஒரு கோயில் கூடக் கட்டியிருக் கிறோம்'' என்றார்கள்.

சிற்பியும் ''அந்தப் பாம்பு நான் தான்'' எனக்கூறினான். ஆனால் ஊரார் அவன் சொல்வதை நம்பவில்லை. அப்போது சிற்பி! ''என்னை இங் கிருந்து நாக மன்னனின் ஆட்கள் நாக லோகத்திற்கு அழைத்து போனார்கள். அங்கே நாக மன்னன் ஒரு அரண்மனை யைக் கட்டும் படிக் கூறினான். நானும் ஒப்புக் கொண்டு அரண்மனையைக் கட்டலானேன். அப்போதுதான் நம் ஊரில் மழை பெய்யாது பஞ்சம் ஏற் பட்டது தெரிந்தது. நான் நாகமன்னனி டம் சொல்லி இங்கு மழை பெய்யச் செய்தேன்'' என்று தன் நாகலோக அனுபவத்தை அவர்களிடம் கூறி னான். அப்போது எல்லோரும் அந்த ஊருக்கு அவன் நன்மை செய்ததற்காக அவனைப் பாராட்டினார்கள்.



*THEY STOOD UP TO THE BRITISH!*

**1**

# மீர் காசிம்

*STORY : MEERA UGRA*
*PICTURES : GOUTAM SEN*

1757 ஜுன் 23ல் கிடைத்த ப்ளாஸி யுத்த வெற்றிக்குப் பிறகு, பிரிட்டிஷ் கிழக்கிந்தியக் கம்பெனிக்கு வங்காளத்தில் யார் ஆட்சி புரிவது என்று தீர்மானிக்கும் அதிகாரம் கிடைத்து விட்டது. சிராஜ் உத்தௌலாவுக்கு துரோகம் செய்த அவனது சேனாதிபதி மீர் ஜாபரைக் கம்பெனி வங்காளத்தின் சுபேதாராக நியமித்தது. அதன் பின் 1760ல் மீர் ஜாபரைப் பதவியிலிருந்து நீக்கி விட்டு அவனது மாப்பிள்ளையான மீர் காசிமை கம்பெனி சுபேதாராக நியமித்தது.



உள்ளூர் வியாபாரிகளை விட சக்தி வாய்ந்த கம்பெனியின் வியாபாரம் ஓங்கியது







சுங்கவரி செலுத்தக் கம்பெனி அதிகாரிகள் மறுத்தனர்




இவ்விதமாய் கம்பெனி உள்ளூர் வியாபாரிகளை விட பொருள்களைக் குறைந்த விலைக்கு விற்க முடிந்தது.







வியாபாரிகள் மீர்காசிமிடம் சென்று விஷயத்தைக் கூறவே –




மீர் காசிம் இவ்விஷயமாகக் கிழக்கிந்தியக் கம்பெனி கவர்னருக்குக் கடிதம் எழுதினார். ஆனால் அதற்கு பதிலே கிடைக்கவில்லை.



மீர் காசிம் வியாபார சுங்க வரிகளையும் உள்ளூர் வரிகளையும் ரத்து செய்தார்.




ஆங்கிலேயர்கள் கோபம் கொண்டனர்







தன் கட்டளையைத் திரும்பப் பெற மீர் காசிம் ஒப்புக் கொள்ளவில்லை




பட்னாவிலுள்ள ஆங்கிலப் பண்டகசாலை அதிகாரி எல்லிஸ் தலைமையில் பிரிட்டிஷ் படைகள் 1763 ஜுன் 23ல் பட்னா கோட்டையை முற்றுகை இட்டது



மீர்காசிம் பட்னாவிற்குப் போய் வில்சனின் படைகளைச் சிறைப் படுத்தினான்

எல்லோரையும் சிறையில் அடையுங்கள்

ஆனால் அதற்குப் பின் நடந்த போரில் மீர் காசிமின் படைகள் தோற்றுப் போயின.

சக்கரவர்த்தி ஷா ஆலமிடம் இருந்தும் அயோத்தி நவாப்பிடம் இருந்தும் உதவி கோருகிறேன்

1764 அக்டோபர் 2ல் நடந்த பக்ஸர் போரில் மீர் காசிமும் அவனது நண்பர்களின் படைகளும் தோற்றுப் போயின.



இரண்டாவது ஷா ஆலம் 1765 ஆகஸ்ட் 12ல் வங்காளம், பீகார், ஒரிஸ்ஸா ஆகிய பகுதிகளில் கம்பெனிக்கு ஆட்சி புரியும் உரிமையைக் கொடுத்தார்.

மீர்காசிம் டில்லிக்கு தப்பி ஓடி ஆங்கிலேயர் கையில் அகப்படாமல் வாழ்வின் மீத நாட்களைக் கழித்தார்





வங்காளம் மீண்டும் கொள்ளைக்குள்ளாகியது. 1769 மே 20ல் ரிச்சர்ட் பெல்சர் என்ற கம்பெனி உயர் அதிகாரி ரகசியக் கமிட்டி டைரக்டர்களுக்கு இவ்வாறு எழுதினான். ''கம்பெனி பொறுப்பேற்றபின் இந்நாட்டு [illegible] மாகி விட்டது. செழிப்பாக உள்ள இந்த நாடு அழிவை நோக்கிப்போய்க்கொண்டிருக்கிறது.''




கீசகன் மறுநாள் காலை சைரந்திரியைச் சந்தித்து ''பார்த்தாயா? நேற்று உன்னை அரச சபையில் அவமானப் படுத்தினேன். யாராலாவது தடுக்க முடிந்ததா? என்னை எதிர்த்து யாராலும் பேசவோ அல்லது எதுவும் செய்யவோ முடியாது. அரசரே என் பலத்தை நம்பித்தான் ஆட்சி புரிகிறார். நான் இல்லாவிட்டால் இந்த நாட்டை எதிரிகள் கைப்பற்றிக் கொண்டு விடுவார்கள். உண்மையில் நான்தான் இந்நாட்டு மன்னன். நான் எதையும் செய்ய முடியும். அதனால் நீ பேசாமல் என் மாளிகைக்கு வந்து இருந்து விடு'' என்றான்.

சைரந்திரியும் ஏதோ யோசிப்பவள் போல நடித்து ''இப்போதுதான் நீங்கள் யாரென்று புரிகிறது. நான் உடனடியாக உங்கள் மாளிகைக்கு வந்தால் என் கணவர்களான கந்தர்வர்கள் என்ன செய்வார்களெனச் சொல்ல முடியாது. அதனால் நாம் யாருக்கும் தெரியாமல் இரவு வேளைகளில் சந்திக்கலாம். அதற்கு ஏற்ற இடம் நர்த்தனசாலை அங்குதான் இரவில் யாரும் இருக்க மாட்டார்கள். இன்றிரவு நீங்கள் அங்கே வந்து விடுங்கள். நான் உங்களுக்காகக் காத்துக் கொண்டிருப்பேன். இருட்டாக இருப்பதால் நம்மை யாரும் பார்க்க முடியாது'' என்றாள்.

கீசகனும் அப்படியே செய்வதாகக் கூறி மகிழ்ந்தவாறே சென்றான். சைரந்திரியும் சற்று நேரத்திற்குப் பின் சமையற் கட்டிற்குப் போய் வல்லபனான பீமனைக் கண்டு கீசகன் அன்றிரவு நர்த்தன சாலைக்கு வரப் போவதைக் கூறினாள். பீமனும் ''வரட்டும். ஆனால் அங்கிருந்து உயிருடன் திரும்பப் போவதில்லை'' என்று பற்களை நறநறவெனக் கடித்துக் கொண்டே கூறினான். சைரந்திரியும் ''அவனை சண்டையிட்டுக் கொன்று போட வேண்டும். அப்போதுதான் கந்தர்வர்



போய் ''சைரந்திரி! என் அந்தப்புரத்தில் பட்டு மெத்தை விரிக்கப்பட்ட கட்டிலில் படுக்க வேண்டிய நீ இந்த மரக்கட்டிலிலா படுத்திருப்பது? ஆனாலும் உன்னை அடைய வேண்டுமென்பதற்காக இந்த இருட்டு வேளையில் யாருக்கும் தெரியாமல் நீ கூறியபடியே வந்து விட்டேன். எழுந்து உட்கார். நானும் உன் பக்கத்தில் அமர்கிறேன்'' என்றான்.

பீமனும் சட்டென எழுந்து கீசகனைப் பிடித்துக் கொண்டு ''அடே! உன்னைக் கட்டித்தழுவுகிறேன். இந்த மாதிரி சுகத்தை நீ ஒருநாளும் அனுபவத்திருக்க மாட்டாய். என் பிடியில் அகப்பட்ட உன் கழுத்தை ஒரு கோழியைத் திருகுவது போலத் திருகிக் கொல்கிறேன் பார். சைரந்திரியையா அடைய ஆசைப்படுகிறாய்? முட்டாளே!'' என்று கூறி அவன் கழுத்தை நெருக்கினான்.

கீசகன் பீமனின் பிடியிலிருந்து சிரமப்பட்டுத் தன்னை விடுவித்துக் கொண்டான். அவன் பீமனை பயங்கரமாகத் தாக்கினான். பீமனோ அவனைத் தன் நகங்களால் கீறி, பற்களால் கடித்து அவனைக் கீழே தள்ளி பந்தை உதைப்பது போல உதைத்தான். சற்று தூரத்தில் போய் கீசகன் விழுந்தான். அவன் எழுந்து மறுபடியும் பீமனைத் தாக்க வந்தான். அப்போதும் பீமன் ஒரு உதை கொடுத்து அவனை கீழே விழச் செய்தான்.

விழுந்த கீசகனின் மார்பின் மீது பாய்ந்து உட்கார்ந்து பீமன் மார்பிலும் முகத்திலும் சரமாரியாகக் குத்துகளை விட்டான். கீசகன் ஓவென அலறியவாறே உயிரை விட்டான். இறந்த பிற

கள் அவனை கொன்றார்கள் என்று நம்ப வைக்க முடியும்'' என்றாள். பீமனும் அவ்வாறே செய்வதாகக் கூறி அவனை அனுப்பினான்.

அன்றிரவு பீமன் நர்த்தன சாலைக்குப் போய் கட்டிலின் மீது படுத்துக் கொண்டான். தன் மீது அவன் ஒரு புடவையையும் போர்த்திக் கொண்டான். கீசகன் சைரந்திரியை அடையப் போகும் சந்தோஷத்தில் பட்டாடைகளை அணிந்து கொண்டு வாசனைத் திரவியங்களைப் பூசிக் கொண்டு உல்லாசமாய் நர்த்தன சாலைக்குச் சென்றான். அதற்குள் ஒரே இருட்டாக இருந்தது. அவன் கட்டிலின் மீது நன்கு போர்த்துக் கொண்டு படுத்துக் கொண்டிருந்த பீமனை சைரந்திரி என்று எண்ணி விட்டான்.

அதனால் அக்கட்டிலின் அருகே

கும் பீமன் கீசகனின் தலையையும் கைகளையும் அவனது உடலுக் குள்ளேயே திணித்து அவனை உருத் தெரியாமல் ஏதோ ஒரு மாமிச மொத்தை போலச் செய்தான்.

அப்போதும் அவன் ஆத்திரம் அடங்கவில்லை. அந்த உடலை மிதித்து நசுக்கி ஓரிடத்தில் போட்டு அதை திரௌபதியான சைரந்திரிக்குக் காட்டி "உன்னை அடைய நினைத்த இவன் கதியைப் பார்த்தாயா? இதே கதிதான் அந்த துரியோதனனுக்கும் ஏற்படப்போகிறது" எனக்கூறினான். கீசகனை பீமன் எவ்வாறு கொல்வான் என்பதைக் காண வந்த சைரந்தரி கீசகனின் உடல் உருத்தெரியாது போனது கண்டு மகிழ்ந்தாள்.



பீமன் அங்கிருந்து போய் விட் டான். அதன்பின் சைரந்திரி நர்த்தன சாலைக் காவலாளியை தூக்கத்தி லிருந்து எழுப்பி "கீசகனைக்கந்தர்வர் கள் கொன்று விட்டார்கள். போய் பார்" என்று கூறிவிட்டுப் போனாள். அவனும் கீசகனின் உறவினர்களை எல்லாம் அழைத்துக் கொண்டு வந் தான். யாவரும் உருத்தெரியாமல் மொத்தையாக உள்ள கீசகனின் உட லைப் பார்த்தார்கள்.

அந்த உடலை தகனம் செய்ய கீசகனின் சகோதரர்கள் எடுத்துச் சென்றனர். அப்போது சற்று தூரத்தில் சைரந்திரி ஆற்றை நோக்கிப் போய்க் கொண்டிருப்பதை அவர்கள் பார்த் தார்கள். அவளால்தானே தம் சகோ தரன் கீசகன் இறந்தான் என ஆத்திரம் கொண்டு அவளையும் சேர்த்து கீசகனின் உடலோடு எரித்து விடத் தீர்மானித்து ஓடிப் போய் அவளைப் பிடித்துக் கொண்டார்கள்.

அவள் "ஐயோ! என்னைக் காப் பாற்றுங்கள்" என அலறவே அது நர்த்தனசாலையிலிருந்து திரும்பிப் போய்க் கொண்டிருந்த பீமனின் காதில் விழுந்தது. உடனே அவன் "சைரந்திரி! பயப்படாதே. வந்து விட்டேன் உதவிக்கு" எனப் கூறிக் கொண்டே ஓடி வந்து உப கீசகர் களைத்தாக்கலானான். அருகிலிருந்த ஒரு மரத்தைப் பிடுங்கி அதைக் கொண்டு அந்தக் கயவர்களை அவன் கடுமையாகத் தாக்கலானான்.

உபகீசகர்கள் அவ்வாறு தாக்கும் பீமனைக் கண்டு "ஐயோ! கந்தர்வன் தாக்குகிறான்" எனக் கூறி சைரந்தி ரியை விட்டு விட்டார்கள். ஆனால் பீமனோ அவர்களை விட்டவில்லை. அந்த நூற்றைந்து உபகீசகர்களையும்



அடித்துக் கொன்றான். பிறகு அவன் சைரந்திரியிடம் ''நீ பயப்படாமல் அந்தப்புரத்திற்குப் போ. நானும் என் சமையற் கட்டிற்குப் போகிறேன்'' என்றான். சைரந்திரியும் அரண்மனைக் குச் செல்ல, பீமனும் சமையற் கட்டிற் குச் சென்றான்.

அப்போது சிலர் ஓடி விராட மன்ன னிடம் ''அரசே! கீசகனும் உபகீசகர் களும் சைரந்திரியை விரும்பியும் துன் புறுத்தியும் பார்த்ததால் அவர்களை கந்தர்வன் கொன்று விட்டான். சைரந்திரிக்கு அபூர்வ சக்தி உள்ளது. அவள் அரண்மனை வந்து விட்டாள். அவளால் நமக்கு எதுவும் கஷ்டம் ஏற்படாத விதமாய்ப் பார்த்துக் கொள்ளுங்கள்'' என்றனர்.

விராட மன்னனும் ''சரி. கீசகனது உடலையும் உபகீசகர்கள் உடலையும் தகனம் செய்ய ஏற்பாடு செய்யுங்கள்'' எனக் கூறிவிட்டு அந்தப்புரத்திற்குப் போய் தன் மனைவி சுதேஷ்ணையிடம் ''அந்த சைரந்திரி வந்தால் அவளை மரியாதைகள் செய்து வேலையை விட்டு நிறுத்தி விடு. அவள் இங்கு இருப்பதால் கந்தர்வர்களால் நமக்கு என்னென்ன கெடுதல்கள் விளை யுமோ என்று பயப்படுகிறேன். நானே இதை அவளிடம் கூறலாமென்றால் அதற்கு எனக்கு தைரியம் இல்லை. அதனால்தான் இவ்வாறு செய்யும்படி உன்னிடம் சொல்கிறேன்'' என்றான்.

சைரந்திரி குளித்து விட்டு அரண் மனைக்குச் சென்று கொண்டிருந்தாள். அவளைப் பார்த்த சிலர் கந்தர்வர் கள் என நினைத்து பயந்து ஓடிப் போனார்கள். சிலர் அவளைப் பார்க் கவே பயந்து கண்களை இறுக மூடிக் கொண்டார்கள். அவள் சமையல்கட் டைத் தாண்டிச் செல்லும் போது பீமன் அதன் வாசலில் நின்று கொண் டிருந்தான். அவனைக் கண்டதும் வானத்தை நோக்கிக் கைகூப்பிய வாறே ''என்னைக் காப்பாற்றிய கந் தர்வ மன்னனுக்கு என் வணக்கங் கள்'' என்று அவன் காதில் விழும் வித மாகக் கூறினாள். பீமனும் சிரித்த வாறே ''உன்னைத் துன்புறுத்தியவர் களை எல்லாம் அந்த கந்தர்வன் ஒழித்து விட்டான் போலிருக்கிறதே'' என்று கூறினான்.

சைரந்திரி உள்ளே போய் அரசகு மாரிகளுக்கு நடனப் பயிற்சி அளித்துக் கொண்டிருக்கும் அர்ஜுனனான பிர கன்னளையைக் கண்டாள். அவளைக் கண்டதுமே எல்லோரும் ஓடி வந்து அவள் பெருத்த அபாயத்திலிருந்து

தப்பி வந்ததற்காக தம் மகிழ்ச்சியைத் தெரிவித்தார்கள். பிரகன்னளையும் ''சைரந்திரி! நீ எப்படி இந்த அபாயத்தி லிருந்து தப்பி வந்தாய்? அவர்கள் எப்படி இறந்தார்கள்?'' என்று ஆவலு டன் கேட்டாள். சைரந்திரியும் ''பிர கன்னளை! இதை ஏன் கேட்கிறாய்? உன்னால் எனக்கு ஏதாவது உதவி செய்ய முடியும் என்றா? நீதான் சுக மாக அந்தப்புரத்தில் காலம் கழித்துக் கொண்டிருக்கிறாயே. உனக்கு இந்த ஏழை சைரந்திரியைப் பற்றி ஏன் கவலை?'' என்று சற்றுக் குத்தலாகக் கேட்டாள்.

பிரகன்னளையும் ''நான் உன் னோடு எவ்வளவு நெருங்கிப் பழகி வருகிறேன். உன்னைப் பற்றிய கவலை எனக்கு இருக்காதா?'' என்று கேட்டாள். பிறகு அவள் அரசகுமாரி களுடனும் சைரந்திரியுடனும் ராணி சுதேஷ்ணையிடம் சென்றாள்.

சைரந்திரியைக் கண்டதும் சுதேஷ்ணை ''சைரந்திரி! மன்னர் உன்னைப் பற்றியும் உன் கந்தர்வர் களைப் பற்றியும் மிகவும் பயப்படு கிறார். அதனால் நீ இங்கிருந்து வேறு எங்காவது போய்விடு. உன் அழகைப் பார்த்தாலே எல்லோரும் மதி மயங் கிப் போய்விடுகிறார்கள். உன் கந்தர் வர்களோ ரொம்பவும் கோபக்காரர் களாக இருக்கிறார்களே'' என்றாள்.

சைரந்திரியும் ''அரசியே! இன்னும் பதிமூன்று நாட்களானதும் கந்தர்வர் கள் என்னை அழைத்துக் கொண்டு போய் விடுவார்கள். அதுவரை மன்ன ரைப் பொறுத்திருக்கும்படிச் சொல் லுங்கள். அதற்குப் பிறகு உங்களுக்கு எவ் விதத் தொந்தரவும் இராது'' என்றாள்.

மிகுந்த பலசாலியான கீசகனும் அவனது சகோதரர்களும் இறந்து போனதால் விராட நகர மக்கள் சஞ் சலப் பட்டார்கள். ஒரு பெண்ணின் காரணமாகக் கீசகன் கந்தர்வர்களால்



கொல்லப் பட்டான் என்ற விஷயம் எல்லா நாடுகளிலும் பரவியது. இச் சமயத்தில் துரியோதனனின் ஒற்றர்கள் பாண்டவர்கள் எங்கே இருக்கிறார்கள் என்று தேடி அலைந்து கொண்டிருந் தார்கள். அவர்களால் கண்டு பிடிக்க முடியாது போகவே கர்ணனும் துச்சா தனனும் ''நாம் எப்படியும் பாண்டவர் களைக் கண்டுபிடித்து அவர்களை மீண்டும் வன வாசத்திற்கு அனுப்பு வோம். இந்த வேலைக்காக நாங்கள் மிகவும் திறமைமிக்க ஒற்றர்களை அனுப்பி பாண்டவர்கள் இருக்கும் இடத்தை விரைவில் தெரிந்து கொள் கிறோம்'' என்றார்கள். ஹஸ்தினா புரத்திற்குப் போய் அவர்கள் தங்க ளால் பாண்டவர்களைக் கண்டு பிடிக்க முடியவில்லை என்று தெரி வித்தார்கள். கீசகன் கந்தர்வர்களால் கொல்லப் பட்டானென்றும் அந்த கந்தர்வர்களை அங்கிருந்த யாரும் பார்க்கவில்லை என்றும் தெரிவிக்கப் பட்டது.

துரியோதனன் ராஜ சபையில் ''பாண்டவர்களை அவர்களது அஞ் ஞாத வாசம் முடியு முன் எப்படியும் கண்டுபிடித்தாக வேண்டும். அப் போதுதான் அவர்களை நிபந்தனைப் படி மீண்டும் வனவாசத்திற்கு அனுப்ப முடியும்'' என்றான். அதற்கு எல்லோரும் தமக்குத் தோன்றிய யோசனைகளைக் கூறினார்கள். பீஷ்மரோ ''பாண்டவர்கள் எந்த நாட் டில் இருக்கிறார்களோ அந்த நாடு செழிப்பாக இருக்கும். மக்களும் அங்கு சுகமாக இருப்பார்கள். அப் படிப்பட்ட நாடு எது எனக் கண்டு பிடித்து அங்கு பாண்டவர்களைத் தேடிப் பார்க்கலாம்'' என்றார்.

கிருபாசாரியாரும் ''பீஷ்மர் கூறு வது சரியே. ஆனால் பாண்டவர்கள் அஞ்ஞாத வாசத்தை முடித்துவிட்டு வந்தால் அவர்களுக்கு அவர்களது நாட்டைக் கொடுக்க வேண்டும். அப் படிக் கொடுக்காவிட்டால் போர்தான் மூளும். போருக்கு படை பலத்தைப் பெருக்க வேண்டும். ஆயுதங்கள் தயா ரிக்க நிறையப் பணமும் வேண்டும். இதற்காக மன்னர்களை எல்லாம் எப்படியாவது நம் பக்கம் சேர்த்துக் கொள்ள வேண்டும். பொக்கிஷத்தை யும் நிரப்பிக் கொள்ள வேண்டும். இப் படிச் செய்தாலே போர் மூண்டால் வெற்றி பெற முடியும்'' என்றார்.



# அம்புலிமாமா செய்திகள்



## ரெவரெண்ட் ஸ்பைடர்மேன்

சுவர்களில் நெட்டுக் குத்தலாய் நடப்பதையும், கட்டடங்களின் மேல் தளங்களிலிருந்து ஒன்றிலிருந்து மற்றதற்குத் தாண்டுவதையும் 'ஸ்பைடர்மேன்' என்பவன் செய்வதைக் 'காமிக்' புத்தகங்களில் கண்டிருப்பீர்கள். திரைப்படங்களிலும் கண்டிருப்பீர்கள். இது போல 10 அல்லது 15 அடி உயரச் சுவர்களில் கொஞ்சமும் சிரமமில்லாமல் ஏறித் தாண்டக் கூடிய ஒருவர் கேரளத்தில் முத்தொளியில் இருக்கிறார். அவர் பெயர் ரெவரெண்ட் ஃபாதர் மாத்யூ. இவர் புனேயில் கராத்தே பயிற்சி பெற்று 'பிரௌன் பெல்ட்' வாங்கியவர். சாதாரண விவசாய குடும்பத்தில் பிறந்த இவர் பத்தாவது வகுப்பில் தேர்வு பெற்றதும் மத விஷயங்களில் ஆர்வம் காட்டி சர்ச்சில் சேர்ந்து ரெவரெண்ட் ஃபாதர் ஆனார். அவரிருந்த மாடி மீது ஒரு பூனை சிக்கிக் கொண்டது. அதைக் கீழே கொண்டு வர சிலர் ஏணி எடுத்து வர ஓடினார்கள். அப்போது ஃபாதர் மாத்யு சுவர் மீது எகிரிக் குதித்துப் போய் பூனையை எடுத்துக் கொண்டு கீழே குதித்தார். இவரது திறமையையும் இரக்க சுபாவத்தையும் மக்கள் மிகவும் போற்றினார்கள்.

## பொன்மயமான பொழுதுகள் 16 விடைகள்

**உலகில் எங்கு?**

1. கர்நாடக மாநிலத்து பேலூர் சென்னகேசவ ஆலயத்தில்.
2. தென் அமெரிக்காவின் பெரு நாடு.
3. போலண்டில் பிலீஸ்கா.

**உயிரினங்கள் பெயர்:**

1. பெங்குவின். 2. சிம்பான்ஜி. 3. நீலத்திமிங்கலம். 4. கிவீ. 5. நெருப்புக் கோழி. 6. ஒட்டகம். 7. டிங்கோ.

**கதைப் புதிர்**

அவசரத்தில் அவன் தன் சைக்கிளுக்கு பதிலாக வேறொருவர் சைகிளை எடுத்துப் போய் விட்டான்.

**மூளைக்கு வேலை**

1. இது ஒரு வகை மரம். 2. பந்தை உயர எறிந்தால் அது கீழே வரும். 3. ஆசியக் கண்டக் குரங்குகள் அவ்வாறு தம் வால்களைக் கீழே தொங்கவிடுவதில்லை. 4. அவன் பென்சிலை எடுத்து 'நான்இடது காதால்' என்று எழுதினான். 5. அது எழுந்திருக்கும்வரை காத்திருப்பார்கள். 6. இரண்டாண்டு கன்றுக்குட்டியாகிறது. 7. வயதாகுதல்.



நம் நாட்டுக்
கண்கவர் காட்சிகள்

# மிர்ஜாப்பூர் விரிப்புகள்

மிர்ஜாப்பூரில் எங்கு சென்றாலும் சைக்கிள் களிலும் குதிரை வண்டிகளிலும் மோட்டார் சைக்கிள் களிலும, ஜீப்களிலும், சில சமயங்களில் ஒட்டகங்கள் மீதும் கட்டு கட்டுகளாக விரிப்புகள் எடுத்துச் செல்லப்படுவதைக் காணலாம். அழகிய வேலைப் பாடுகளுள்ள விரிப்புகளுக்கு மிர்ஜாப்பூர் பெயர் பெற்றது. இக்கலையை முதலில் எகிப்திலிருந்து மற்றவர்கள் கற்றுக் கொண்டதாகக் கூறுகிறார்கள்.




கங்கை நதியின் தெற்குக் கரையிலுள்ள மிர்ஜாப்பூர், பாகோலி பகுதிகளில் விரிப்புகள் தயாரிக்கும் கைத் தொழில் நடைபெற்று வருகிறது. கஷ்மீர் விரிப்புகளைப் போலல்லாமல் இங்கு பாரசீக விரிப்புகளில் சற்று மாறுதல்கள் செய்த விரிப்புகள் தயாரிக்கப்படுகின்றன.

இவை 7/52 அல்லது 9/60 எனப்படுகின்றன. இவை ஒரு சதுர அங்குலத்தில் இவ்வளவு முடிச்சுகள் இருக்க வேண்டுமெனக் குறிக்கும் அளவுகள். 9/60 ரக விரிப்பு ஒரு சதுர மீட்டருக்கு ரூ. 700 முதல் ரூ. 900 வரை விலைக்கு விற்கப்படுகிறது.

நம் தேசத்து விரிப்புகள் முதன் முதலாக அயல் நாட்டவர்களைக் கவர்ந்தது 1851ல் லண்டனில் நடந்த கண்காட்சியில்தான். இப்போது நம் நாட்டு விரிப்புகளை ஜெர்மனி, இங்கிலாந்து, அமெரிக்கா, ஆஸ்திரேலியா முதலிய நாடுகள் வரவழைத்துக் கொள்கின்றன.

புராணகால மன்னர்கள் :

# ஜஹ்னு

மக்களுக்கு எவ்விதக் குறையும் தோன்றாமல் ஆட்சி புரிந்து வந்தவர் மன்னர் ஜஹ்னு. அவரது ஆட்சியில் மக்கள் சுகமாக இருந்தனர். மன்னர் மக்களின் நிலையை நேரில் கண்டறிய அவ்வப்போது நாட்டில் சுற்றுப் பயணம் செய்து வந்தார். மக்கள் விவசாயத்தில் ஈடுபட்டு ஆடிப் பாடி மகிழ்வதைக் கண்டு அவர் ஆனந்தம் அடைந்து வந்தார்.

ஒரு முறை அவர் ஒரு ஆற்றின் கரையில் அமர்ந்து அதன் நீரோட்டத்தை கவனித்துக் கொண்டிருந்தார். ஆற்று நீர் ஓடிக்கொண்டே இருந்தது. காலமும் அந்த ஆற்றின் நீரோட்டத் தைப் போல நில்லாமல் கழிந்து கொண்டே இருக்கிறது. வாழ்க்கையில் காலத்தை வீணாக் காமல் நற்பணிகள் செய்து வருவதுதான் அறி வுடையோர் செய்யும் செயல். இவ்வித எண்ண அலைகள் அவர் மனதில் தோன்றின.

மக்களின் நலனைக் காப்பதே மன்னனின் கடமை. அவ்வாறு செய்வதால் மக்கள் கவலை யற்று இருக்கிறார்கள். அண்டை நாட்டு மன்னர் கள் நீதி, நெறி தவறாது அமைதியுடன் இருப்ப தால் மக்களுக்கு எதிரிகள் படை எடுத்து வருவார் களோ என்ற பயமும் இருக்க வில்லை. தன் நாடு இந்த நிலையில் இருந்ததால் ஜஹ்னு காட்டிற் குப் போய் தவம் செய்யத் தீர்மானித்து ஆட்சிப் பொறுப்பைத் தன் மகன் பாலகாஸ்வனிடம் ஒப்படைத்து விட்டு இமய மலை சாரலில் ஹரித்து வாரத்திற்குச் சென்றார்.

அங்கு அவர் தவம் புரிந்து அரிய சக்தியைப் பெற்றார். ஒருநாள் அவர் ஓரிடத்தில் நின்று இயற்கையின் அழகைப் பார்த்துக் கொண் டிருக்கும் போது திடீரென நீர் பெருகி வந்து அவரது ஆசிரமத்தை மூழ்கடித்தது. அதனால் கோபம் கொண்ட அவர் பெருகி வந்த நீர் முழுவதையும் அள்ளிக் குடித்து விட்டார்.

பாதாள லோகத்தில் சாம்பலாகிக் கிடந்த தன் முன்னோர்களுக்கு சாபத்திலிருந்து விடுதலை பெற்றுத்தர பகீரதன் தேவலோகத்தி ருந்து கங் கையை அழைத்துக் கொண்டு வந்து கொண் டிருந்தான். அந்த கங்கை நீர் தான் ஜஹ்னுவின் ஆசிரமத்தை மூழ்கடிக்கவே அவர் அந்த நீர் முழு வதையும் எடுத்துக் குடித்து விட்டார். பகீரதன் தன் முயற்சி பற்றி ஜஹ்னுவிடம் விளக்கிக் கூறவே கங்கையை விடுவிக்கும்படி வேண்டினான். இரக்க மனம் கொண்ட ஜஹ்னுவும் கங்கையைத் தன் காதின் வழியே வெளியே விட்டார். இதனால் கங்கைக்கு ஜாஹ்னவி என்றொரு பெயரும் ஏற் பட்டது என புராணக் கதை நமக்குக் கூறுகிறது.



## உங்களுக்கு தெரியுமா?

### உயரமான கோபுரம்!

கிரேட்டர் மாஸ்கோவில் பாஸ்டணிஸ் க்னோவில் 523 மீட்டர் உயரக் கோபுரம் உள்ளது. இது எவ்விதப் பக்க ஆதாரங்களில்லாமல் என்.வி. நிகிஷன் என்பவரால் சிமிண்டால் கட்டப்பட்டதாகும். இதன் நிறை 55,000 டன்கள். இதைப் பார்க்க வருபவர்கள் 500 மீட்டர் உயரம் வரைதான் செல்லலாம். இதன் லிப்ட்கள் விநாடிக்கு 7 மீட்டர் வேகத்தில் செல்கின்றன. இக்கோபுரத்தில் 337 மீட்டர் உயரத்தில் ஒரு ஹோட்டலும் உள்ளது. இதன் மின் இடி தாங்கிகள் உருண்டை வடிவில் உள்ளன. இது காற்றில் 5 மீட்டர் வரை அசையும். சூரிய வெப்பத்தில் 540 மீட்டர் உயரக் கூடுமாம்.




## வானவில்




### போப்லோ பிகாஸோ

இருபதாவது நூற்றாண்டின் புகழ் பெற்ற ஓவியரும் சிற்பியுமான பிகாஸோ 1881 ஸ்பெயின் நாட்டில் பிறந்தவர். சிறு வயதிலிருந்தே அவர் ஓவியக் கலையில் ஆர்வம் கொண்டார். அவர் குழந்தையாக இருக்கையில் முதலாவதாகக் கூறிய சொல் 'லாபில்' (பென்சில்) என்பதாம். நடக்க ஆரம்பிக்கு முன்பே அவர் படங்கள் வரையத் தொடங்கி விட்டாராம் அவர் பழைய முறையைப் பின் பற்றி வரையும் ஓவியராவார் எனப் பலரும் எதிர்பார்த்தார்கள். ஆனால் அம்முறைகளுக்கு நேர் மாறாக அவர் படங்கள் வரையலானார். சுற்றிலுமுள்ள இயற்கையை வரைந்து காட்ட புதிய முறைகளைப் பயன்படுத்தினார். எளிய சிறிய கோடுகளோடு மிகக் குறைவான வண்ணங்களைப் பயன்படுத்தி உணர்ச்சியூட்டும் 'க்யூபிஸ' ஓவியங்களை வரைந்து அவர் உலகப் புகழ் பெற்றார்.

சுதந்திரத்தின் பொன்விழா ஆண்டில் அம்புலிமாமாவின் காணிக்கை

# முதலாவது சுதந்திரப் போர்



(வியாபாரம் செய்ய அனுமதி பெற்ற ஆங்கில கிழக்கிந்தியக் கம்பெனி நம் நாட்டில் மன்னர்களிடையே ஒற்றுமை இல்லாதது கண்டு ஒவ்வொரு அரசனின் நாட்டையும் தன் வசப்படுத்திக் கொண்டு வரலாயிற்று. சில நாட்களில் அது நாட்டை ஆளும் சக்தி பெற்று எல்லா சமஸ்தான மன்னர்களுக்கும் கட்டளை இடும் துணிவைப் பெற்றுவிட்டது. மகனைப் பெற்றிராத மன்னனின் நாடு தனக்குச் சொந்தம் என்று அதைக் கைப்பற்றி வரலாயிற்று. மகனில்லாத ஜான்சி மன்னர் தன் மனைவியிடம் தத்து எடுத்துக் கொள்ளும்படிக் கூறிவிட்டு இறந்தார். கம்பெனியோ லக்ஷ்மிபாய் சுவீகாரம் எடுத்துக் கொண்டது செல்லாது எனக் கூறி ஜான்ஸியை தனது நாடு என அறிவித்தது. இதனால் லக்ஷ்மிபாய் சீறி எழுந்தாள். பிறகு-)

ஜான்ஸி மக்கள் ராணிலக்ஷ்மி பாயிடம் அன்பும் மரியாதையும் காட்டுபவர்கள். பண்டிதர்கள், பாமரர்கள், விவசாயிகள், வியாபாரிகள், அதிகாரிகள், அர்ச்சகர்கள் என யாருமே லக்ஷ்மிபாயைத் தம்மைக் காக்கும் தாய் போலக் கருதி வந்தார்கள். மக்கள் அரண்மனைப் பக்கம் போகும் போதெல்லாம் ''ஜான்ஸி ராணிக்கு ஜே! அந்நியர் ஆதிக்கம் ஏற்படாமல் ராணியைக் காப்போம்'' என்று கோஷங்கள் எழுப்பி வந்தனர்.

கிழக்கிந்தியக் கம்பெனி ஜான்ஸியைத் தன் வசப்படுத்திக் கொள்ள முயல்வதற்கு முன் லக்ஷ்மிபாயின் அன்றாட வாழ்க்கை முறையாகவும் ஒழுங்காகவும் நடந்து வந்தது. தினமும் சூரியோதயத்திற்கு முன் எழுந்து, நீராடி, வெள்ளைவெளேரென்ற புடவையைக் கட்டிக் கொண்டு பூஜையை

ஆரம்பிப்பாள். சற்று நேரம் தியானத்தில் ஆழ்ந்திருப்பாள். பிறகு எழுந்து துளசி பூஜை செய்து விட்டு வந்ததும் ஆஸ்தான இசைக்கலைஞர்கள் பாடும் பக்திப் பாடல்களைக் கேட்பாள். புராணங்களைப் படிக்கச் சொல்லியும் கேட்பதை வழக்கமாகவும் கொண்டாள்.

இதன் பிறகு அரசாங்க விவகாரங்களை அவள் அதிகாரிகளுடன் பேசி முடிவு எடுப்பாள். அதிகாரிகள், பிரமுகர்கள், மற்றும் பலர் அவளைக் கண்டு வணங்கி மரியாதை செலுத்தி வந்தனர். லக்ஷ்மிபாயும் அவர்கள் யாவருக்கும் வணக்கம் செலுத்தி வந்தாள். அவளது சமஸ்தானத்தில் எழுநூற்றைம்பது பேர்கள் பணிபுரிந்து வந்தனர். அவர்களில் ஒருவரை ஒரு நாள் காணாவிட்டாலும் அவள் அந்த ஊழியர் பற்றி அக்கரையுடன் விசாரித்துக் காரணம் தெரிந்து கொள்வாள்.

மத்தியானம் கிரீடம் அணிந்து ஆண் வேடத்தில் வைரங்கள் பதித்த உறைக்குள் வாளைச் சொருகிக் கொண்டு அவள் தர்பாருக்குள் நுழைவாள். கழுத்தில் வைர மாலையும் கைகளில் கெம்பு பதித்த வளையல்களும் விரல்களில் நவரத்தினங்கள் பதித்த மோதிரங்களும் அணிந்து கொண்டிருப்பாள். அவள் கம்பீரமாக தர்பாருக்குள் நுழைவதே கண்கொள்ளாக் காட்சியாக இருக்கும்.

அவள் அவ்வப்போது தடாகத்தினருகே உள்ள மகாலட்சுமியின் ஆலயத்திற்குப் போய்வருவாள். அச்சமயத்தில் அங்கு மக்கள் கூட்டமாகக் கூடி நிற்பார்கள். லக்ஷ்மிபாய் ஆலய வாயிலை அணுகியதும் அவர்கள் அவளை வணங்கி வரிசையாக நிற்பார்கள். ராணியும் அவர்களுக்கு வணக்கம் செலுத்தியவாறே ஆலயத்துள் செல்வாள். ஒரு நாள் அவள் ஆலயத்திற்குப் போய் விட்டுத் திரும்பி வந்த போது மக்கள் கூட்டமாய் கூடி அவளைக்





காணக் காத்திருந்தனர். அவர்களது உடல் மீது துணியே இல்லாமல் குளி ரில் நடுங்கிக் கொண்டிருந்தார்கள்.

இதைக் கண்ட அவளது மனம் மிக வும் வேதனைப்பட்டது. ஆம் அவர் கள் ஏழைகள். துணி வாங்க அவர் களிடம் பணம் ஏது? எனவே அவர் களைக் குளிரிலிருந்து பாதுகாக்க புதிய துணி களைக் கொடுக்க வேண் டும். இவ் வாறு எண்ணி அவள் அரண் மனையை அடைந்ததும் தையல்காரர் களை அழைத்து சட்டைகளையும் குல்லாய்களையும் தைக்கச் சொன் னாள். அவர்களும் வெகு விரைவில் அவற்றைத் தைத்துக் கொடுத்தனர். அவள் மறுமுறை ஆலயத்திற்குப் போன போது சட்டைகளையும் குல்லாய்களையும் எடுத்துப் போய் அங்கு தனக்காகக் காத்திருந்த ஏழை மக்களுக்குக் கொடுத்தாள். அவர் களும் ராணியை வாழ்த்தி அவற்றை வாங்கி அணிந்து கொண்டு அவளை மகிழ்வித்தனர். அவளுக்குத் தம் மனப் பூர்வமான நன்றியையும் தெரிவித்துக் கொண்டனர்.

இவ் விதப் பரிவான செய்கை களால் மக்களுக்கு ராணி மீது அன்பும் பாசமும் அதிகரிக்கலாயிற்று. ஆனால் இந்த அன்பும் பாசமும் மட்டுமே நாட் டைப் பாதுகாக்கப் போதுமா? கம் பெனியர் சதிகாரர்கள். நேர்மையைக் கடைப்பிடிக்காதவர்கள். சிறு சமஸ் தானங்களை எப்படியாவது தம் வசப் படுத்திக் கொண்டுவிடுபவர்கள். இப் பேர்ப் பட்டவர்களை எதிர்க்கத் துணிச் சலும், சதிகளை முறியடிக்கச் சரியான யோசனைகள் கூறுபவர்களும் தேவை நாட்டுப்பற்று கொண்டவர்களையும் தனது நலனை விரும்புவர்களையும் அவள் தன் தலைமையில் ஒன்று திரட்ட வேண்டும். இவ்விஷயத்தில் லக்ஷ்மிபாயின் சகோதரர் போல் இருந்து உதவி வந்தவர் புரியைச் சேர்ந்த சந்தன் ஹுஜூர்.

பழங்கால நகரமானதும் புண்ணி யத் தலமுமான ஜகன்நாதபுரி என்ற புரியில் சந்தன் ஹுஜூர் என்ற இளை ஞன் இருந்தான். லக்ஷ்மி பாயுக்கு ஐந்து வயதாகையில் அவளது பெற்றோர் அவளை அழைத்துக் கொண்டு புரிக் குச் சென்றனர். அக்காலத்தில் புரிக்குச் செல்பவர்கள் அங்கு ஆலய அர்ச்சகர் களின் இல்லங்களில்தான் தங்குவார் கள். அவ்வாறு தங்கிய லக்ஷ்மிபாயின் குடும்பத்தவர் ஒரு அர்ச்சகரின் மக னான சந்தனைத் தம் மகன் போலக் கருதினார்கள். அவனும் அவர்களு

டன் சகஜமாகப் பழகினான். அவர் களது குடும்பத்தவர்களில் ஒருவன் போலாகிவிட்டான். லக்ஷ்மிபாயும் அவனைத்தன் சகோதரன் போல எண் ணிப் பழகலானாள். அவர்கள் கூறிய படி லக்ஷ்மிபாய்தான் கோவிலில் பெற்ற பிரசாதத்தைச்சந்தனின் வாயில் ஊட்டி அவனை 'அண்ணா' என்று அழைத்து மகிழ்ச்சி அடைந்தாள்.

அவனும் ''தங்கையே! நானும் மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன் இனி மேல் வாழ்வின் சுகதுக்கங்களை அண் ணன் தங்கைகளான நாம் சமமாகப் பகிர்ந்து கொள்வோம்'' எனக் கூறி னான். கொஞ்சகாலத்திற்குப் பின் அவள் லக்ஷ்மிபாய் ஜான்ஸியின் ராணி யாகிவிட்டாள் என்று கேட்டதும். ஒரேயடியாகப் பூரிந்துப் போனான். சந்தனின் திருமணத்தின் போது லக்ஷ்மிபாய் தானே நேராக வர முடி யாமல் போயிற்று. அவளுக்குச் சிக்க லான பிரச்னை இருந்தது. அதுதான் ஆங்கிலேயர் அவள் சுவீகாரம் எடுத் துக் கொண்டது செல்லாது எனக் கூறி அவளது நாட்டை அபகரித்து கொள்ள முயன்று கொண்டிருந்ததுதான். அத னால் அவள் தன் தூதுவர் ஒருவர் வாயி லாக விலையுயர்ந்த பரிசுகளை அனுப் பினாள. அவற்றைக் கண்டு சந்தன் மிக வும் மகிழ்ந்து போனான்.

ஜான்ஸி ராணிக்கும் அவளது நாட் டிற்கும் வரப்போகும் ஆபத்து பற்றி அறிந்ததும் சந்தன் மிகவும் கலங்கிப் போனான். திருமணமான மறுநாளே தனக்குப் பரிசுகளை கொண்டு வந்து கொடுத்த தூதுவருடன் அவன் ஜான்ஸிக்குக் கிளம்பி விட்டான். சந்தன் ஜான்ஸியை அடைந்த போது



அங்கு நிலைமை மேலும் மோசமாகி இருந்தது. சந்தனைக் கண்டதும் லக்ஷ்மிபாயின் மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. ஆனால் திருமணமான மறு நாளே அவன் கிளம்பி வந்த விட்டான் என்று கேட்டு அவள் மிகவும மனம் வருந்தினாள்.

அவள் அது பற்றிச் சந்தனிடம் கேட்கவே, அவனும் ''என் தங்கைக்கு ஆபத்து என்று கேட்டதும் என்னால் எப்படி சந்தோஷமாக இருக்க முடி யும்? அதனால்தான் நான் ஓடோடி வந்தேன். இப்போதுள்ள நிலையில் உனக்கு எந்த அரசராவது உதவி புரிய முன் வருவாரா? என்று கேட்டான்.

லக்ஷ்மி பாயும் ''சிலர் உதவுவ தாகக் கூறி இருக்கிறார்கள். வேறு சிலர் பதில் எதுவும் அளிக்கவில்லை. ஆனால் நம்பிக்கைத் துரோகம் செய்

யும் இந்த ஆங்கிலேயர்களை நான் எதிர்த்து போராடும் போது அவர்கள் எனக்கு உதவாமலா போய் விடுவார் கள்?'' என்று கேட்டாள். சந்தனும் ''சிலசமயங்களில் நாம் எதிர்பார்க்கிற படி விஷயங்கள் நடக்காமல் போனா லும் போகலாம். நான் ஒரு சத்திரத்தில் தங்கிய போது இரு பயணிகள் பேசிக் கொண்டிருப்பதைக் கேட்டேன். ஒரு வன் குவாலியரைச் சேர்ந்தவன். மற்ற வன் டெஹ்ரி சமஸ்தானத்தவன். இந்த இரு நாடுகளும் உனக்கு உதவுவதாக கூறி இருக்கிறார்களா?'' என்று கேட் டான்.

லக்ஷ்மி பாயும் ''அது பற்றி நான் உறுதியாக எதுவும் கூற முடியாது'' எனவே சந்தன் ''அந்த இரு சமஸ் தானங்களும் ஆங்கிலேயர் பக்கம் இருப்பதாக அப்பயணிகள் பேசிக் கொண்டதிலிருந்து தெரிய வந்தது'' என்றான். லக்ஷ்மி பாயும் ''அப் படியா?'' எனக் கேட்கவே சந்தனும் ''இது உண்மையா என்று தெரியாது. ஆனால் இப்படிச் சிலர் இருந்தாலும் இருக்கலாம். எதற்கும் கம்பெனி யாரை எதிர்க்க உன்னுடன் சில மன்ன வர்களை நீ சேர்த்துக் கொள்ள வேண் டும்'' என்றான்.

லக்ஷ்மிபாயும் ''நீ சொல்வது சரியே'' எனவே சந்தன் ''தங்கையே! இந்த மாதிரி சமயத்தில் நான் உன் னுடன் இருப்பதுதான் நல்லது, என் உயிர் உள்ளவரை உன்னை எந்த ஆபத்திலிருந்தும் காப்பேன்'' என் றான். லக்ஷ்மிபாயும் ''அண்ணா! என் ஆபத்தை விட நாட்டுக்கு வரும் ஆபத்தை எதிர்த்தாக வேண்டும். நான் என் நாட்டிற்காக என் உயிரை விடவும் தயார். என்னால் என் மக்களுக்கு எவ் விதக் கஷ்டமும் வரக்கூடாது'' என் றாள்.

சந்தனும் ''மக்கள் தைரியமாகவே இருக்கிறார்கள். நாட்டின் சுதந் திரத்தை காக்க அவர்கள் எதுவும் செய் யத்தயாராகவே இருக்கிறார்கள்'' என் றான். அதை கேட்டு லக்ஷ்மி பாய் சற்று யோசித்து ''அண்ணா! நீ இப்போதே புரிக்குத் திரும்பிப் போய் நீ மணந்து கொண்ட மனைவியுடன் வாழ்க் கையை ஆரம்பி'' என்றாள். சந்தனோ ''நான் போக மாட்டேன். உன்னுடன் இருந்து உன்னைப் பாதுகாப்பேன்'' என்று உறுதிபடக் கூறினான்.

**(தொடரும்)**






# வாழக் கற்றுக் கொண்டான்!

காந்தபுரத்தில் காந்தநாதன் ஒரு சிறு வியாபாரி. அவனுக்கு இருபது வயதான போது அவனது தாய் தந்தையர் ஒரு விபத்தில் சிக்கி இறந்து போனார்கள். காந்தநாதனுக்கு அப்போது வாழ்க்கை மீதே வெறுப்பு ஏற்பட்டது. தனியாக இருந்த அவனை மணம் செய்து கொள்ளுமாறு அவனது உறவினர்களும் நண்பர்களும் வற்புறுத்தினார்கள்.

காந்தநாதனோ ''வாழ்க்கையையே வெறுக்கும் எனக்கு திருமணம் எதற்கு? பிறப்பவன் இறக்கத்தானே வேண்டும்? நான் இப்படியே இருந்து இறந்து விட்டுப் போகிறேன்'' என்றான். உறவினர்களோ ''எல்லாம் அவரவர் தலைவிதிப்படிதான் நடக்கும். உன் பெற்றோர் இறந்து விட்டதால் நீ வாழ்க்கையையே வெறுக்கலாமா? கல்யாணம் செய்து கொண்டு குடும்ப வாழ்க்கையை மேற் கொள். இப்போதுள்ள இளமை போய் விட்டால் பிறகு வராது'' என்றனர்.

காந்தநாதனோ ''எல்லாம் அவரவர் தலைவிதிப்படி நடக்கும் என்று நீங்கள்தான் கூறினீர்கள். என்னை விட்டுக் விடுங்கள். என் தலை விதிப்படி நடந்து விட்டுப் போகட்டும்'' என்றான். உறவினர்கள் அவனை மேலும் வற்புறுத்தவில்லை.

அப்போது அவ்வூருக்கு சதரனந்தர் என்ற யோகி வந்தார். அவரைக் காண அவ்வூரிலுள்ள எல்லோரும் சென்றனர். ஆனால் காந்தநாதன் மட்டும் செல்லவில்லை. சதானந்தர் அவனைப் பற்றிக் கேள்விப்பட்டு அவனைக் காண அவரே சென்றார்.

காந்தநாதன் அவரை மரியாதைகளுடன் வரவேற்றான். அவரும் ''அப்பனே! நீ வாழ்க்கையை வெறுக்கிறாயாமே. உன்போன்ற வாலிபர்கள் உற்சாகத்துடன் வாழ்வதுதான் முறை'' என்றார். அவனும் வேலை செய்து சாப்பிட்டுத் தூங்குவதுதான்

—சிவனார் செல்வன்—

எனக்கு வேண்டாம். இதை எல்லோரும் சொல்லச் சொல்லிக் கேட்டு என் காது புளித்து விட்டது. எனவே நீங்களும் திரும்பத் திரும்ப இதையே கூறிக் கொண்டிராமல் ஏதாவது நடக்கக் கூடியதைச் சொல்லுங்கள்'' என்றான்.

அவரும் ''சரி. உன் மனதிற்குப் பிடித்த பெண்ணை முதலில் மணந்து கொள். அப்போது உன் சொத்து சொத்து பத்து லட்சமாகும். உன் மனைவியும் இளவரசியாவாள். அப்போது உன்னை எப்போதும் எல்லோரும் புகழ்ந்து கொண்டிருப்பார்கள். ஆனால் நீ மட்டும் கொஞ்சமும் மாறாமல் இப்படியேதான் இருப்பாய்'' என்றார்.

அப்போது காந்தநாதன் ''இது உண்மைதானா சுவாமி?'' என்று கேட்கவே அவரும் கையை உயர்த்தி ''அப்பனே! எல்லாம் நான் சொன்னது போலவே நடக்கும். எல்லாம் மாறினாலும் நீ மட்டும் மாறாது எப்போதும் போலத்தான் இருப்பாய் என்பதை நினைவில் வைத்துக் கொள். உனக்கு என் வாழ்த்துக்கள்'' என்று கூறிவிட்டுச் சென்றார்.

யோகி கூறியதைக் காந்தநாதன் முழுவதும் நம்பினான். அதனால் அவன் தன் மனதிற்குப் பிடித்த அம்புஜம் என்ற பெண்ணை மணந்து கொண்டான். அம்புஜம் புத்திசாலி. கெட்டிக்காரி. அவள் தன் கணவனைக் கண்ணும் கருத்துமாகக் கவனித்துக் கொண்டாள். திருமணமான ஒரு வருடத்திற்குப் பின் அவர்களுக்கு ஒரு ஆண் குழந்தை பிறந்தது. காந்தநாதனும் தன் மகனைக் கண்டு ஒரு மாபெரும் நிதியையே அடைந்து விட்டவன் போல்



வாழ்க்கை என்றால் அது எனக்குச் சற்றும் பிடிக்க வில்லை'' என்றான்.

அப்போது சதானந்தர் ''அப்படியானால் நீ எத்தகைய வாழ்க்கை வாழ விரும்புகிறாய்?'' என்று கேட்டார். அவனும் ''என் சொத்து பத்து லட்சம் வராகன்களுக்குப் பெருக வேண்டும். என் மனைவி ஒரு இளவரசியாக இருக்க வேண்டும். எல்லோரும் என்னை எப்போதும் புகழ்ந்து கொண்டே இருக்க வேண்டும்! இந்த மாதிரி வாழத்தான் விரும்புகிறேன்'' என்றான்.

சதானந்தரும் ''நல்ல வாழ்க்கை அமைந்து விட்டால் நீதான் ராஜா. உன் மனைவிதான் ராணி. உன் இந்த வாழ்க்கை பல லட்சவராகன்கள் மதிப்புப் பெறுமே!'' என்றார். காந்தநாதனோ ''இந்த வேதாந்தமெல்லாம்

மகிழ்ந்து போனான்.

அவனது வியாபாரம் முன் போல சாதாரணமாகத்தான் நடந்தது. அமோக லாபம் ஒன்றும் கிடைக்க வில்லை. அவனுக்குக் கிடைக்கும் ஆதாயம் குடும்பக் செலவுக்குச் சரி யாக இருந்தது. அம்புஜம் கட்டு செட் டாக இருந்து குடும்பத்தை நடத்தி னாள். கணவனிடம் பட்டுப் புட வையோ அல்லது தங்க நகையோ வேண்டுமென்று கேட்கவில்லை. காந்தநாதன் தன் சொத்து பெருக வேண்டும் என்றும் அவள் இளவரசி யாக வேண்டும் என்று கூறும் போதெல்லாம் அவள் தன் கணவனி டம் ''நாம் வயிறு வாடாமல் திருப்தி யாக சாப்பிடுகிறோம். நோய் நொடி என்று எதுவும் இல்லாதிருக்கிறோம். இருக்கப் பெரிய வீடும் உள்ளது. இதை விட நமக்கு வேறென்ன வேண் டும்?'' என்று அடிக்கடி கூறி வந்தாள்.

அவள் ஒழிந்த வேளைகளில் சங்கீ தம் கற்று வரலானாள். அவள் பாடு வதைக் கேட்டு காந்தநாதனும் மன நிறைவு அடைந்து வந்தான். அம்புஜம் இசையில் நன்கு தேர்ச்சி பெற்று நாடு தழுவிய போட்டியில் கலந்து கொண் டாள். அவள் அதில் யாவருக்கும் முத லாக வந்து பட்டமும் பரிசும் பெற் றாள்.

இச்சமயத்தில் காந்தபுரிக்கு அருகே வைரச் சுரங்கள் இருப்பது தெரிந்தது. அதனால் பெரிய பெரிய பணக்கார வியாபாரிகள் அவ்வூருக்கு வந்து அதிக விலை கொடுத்து வீடுகளை வாங்கி அவற்றில் தங்கி வைர வியா பாரம் செய்யலானார்கள். வீடுகளுக்கு நல்ல விலை கிடைத்ததால் அவ்வூரில்



இருந்தவர்கள் தம் வீடுகளைப் பணக் கார வைர வியாபாரிகளுக்கு விற்று விட்டு வேறு ஊர்களுக்குப் போய் விட்டார்கள். ஆனால் காந்தநாதன் மட்டும் தன் வீட்டை விற்கவில்லை. வேறு ஊருக்கும் போக மனமில்லா மல் தன் சிறு வியாபாரத்தை அதே ஊரில் எப்போதும் போல நடத்தி வந் தான்.

வீடுகளை வாங்கிய வியாபாரிகள் தம் வீடுகளை மிகப் பெரியனவாகக் கட்டிக் கொண்டு உல்லாசமாக வாழ்ந் தார்கள். அந்த வீடுகளுக்கு மத்தி யில் காந்தநாதனின் வீடு மிகச் சிறிய தாகத் தென்பட்டது. அந்த வியாபாரி களின் வருமானத்தோடு காந்தநாத னின் வருமானத்தை ஒப்பிடவே முடி யாது. அந்தப் பணக்கார வியாபாரி களிடம் பல கெட்ட பழக்கங்கள்



இருந்தன. ஆனால் காந்தநாதனிடம் அவை யெல்லாம் இருக்கவில்லை. மிகவும் நல்லவனாக இருந்து வரலானான்.

காந்தநாதனுக்கு வாழ்க்கையில் எவ்விதக் குறைவும் இல்லாது போனாலும் அவ்வளவு பணக்காரர்களிடையே இருக்கும் தான் ஒரு ஏழை தான் என எண்ணலானான். அப்போது அவன் மனம் ''யோகி கூறியதெல்லாம் பொய். அவர் சொல்லி நான்கு வருடங்களாகி விட்டன. என் செல்வம் பெருகவில்லை. என் மனைவி இளவரசி ஆகவில்லை. எனக்குப் புகழும் வரவில்லை'' என்று யோசிக்கலானான்.

இப்படி இருக்கையில் யோகி சதானந்தர் மறுபடியும் அந்த ஊருக்கு வந்தார். அவர் காந்தநாதனைக் காணச் சென்ற போது அவன் தன் குழந்தையுடன் சிரித்து விளையாடிக் கொண்டிருந்தான். அவனைக் கண்டு யோகி ''நீ இப்போது உற்சாகமாக இருக்கிறாயே. திருமணம் செய்து கொண்டபின் உன் வாழ்க்கையில் ஒரு மாறுதல் ஏற்பட்டு விட்டது தெரிகிறது'' என்றார்.

காந்தநாதன் தன் மகனை வீட்டினுள் அனுப்பி விட்டு யோகியை வணங்கி ''சுவாமி! இப்போது எனக்கு வாழ்க்கை மீது வெறுப்பு இல்லை தான். ஆனால் நீங்கள் சொன்னபடி எதுவுமே நடக்கவில்லையே. என் சொத்தும் பெருகவில்லை. என் மனைவியும் இளவரசி ஆகவில்லை. என்னையும் எல்லோரும் புகழ வில்லையே!'' என்று கேட்டான். அப்போது யோகி ''நான் சொன்னதெல்லாம் உன் வாழ்க்கையில் நடந்திருக்கிறது. நான் சொன்னபடி நீயும் முன் போலத்தான் இருக்கிறாய்'' என்று சிரித்துக் கொண்டே கூறினார்.

அது கேட்டு காந்தநாதன் ஆச்சரியப்பட்டு ''சுவாமி! நான் எப்போதும் போல இருப்பது என்னவோ உண்மை தான். ஆனால் மற்ற மாறுதல்கள் எதையும் நான் காணவில்லையே'' என்று கேட்டான். அப்போது அடுத்த வீட்டு வைரவியாபாரியின் தாய் வந்து காந்தநாதனிடம் ''மகனே! உன் போன்ற உத்தமனைப் பெற்ற உன் தாய் தந்தையர் எவ்வளவு புண்ணியம் செய்திருக்க வேண்டும்! என் மகன்களும் இருக்கிறார்களே. வீட்டிலேயே குடித்து விட்டுக் கும்மாளம் போடுகிறார்கள். என்னால் அங்கே உட்கார்ந்து நிம்மதியாக இராமாயணம் படிக்க முடிய

வில்லை. இங்கே உட்கார்ந்து படித்து விட்டுப் போகிறேன். உனக்கு இதில் எந்த ஆட்சேபணையும் இல்லையே'' என்று கேட்டாள். காந்தநாதனும் அதற்கு இசையவே அவள் வீட்டினுள் சென்றாள்.

யோகியும் ''பார்த்தாயா! இது போல் தினமும் உன்னை அக்கம் பக்கத்தவர்கள் புகழ்ந்து கொண்டிருக்கிறார்கள். இது நான் சொன்னது போல நடக்கிறதே'' எனவே காந்தநாதனும் திடுக்கிட்டு அது சரியே என்று ஒப்புக் கொண்டான். அப்போது அவனது மனைவி அம்புஜம் யோகிக்குக் கொடுக்கப் பால் கொண்டு வந்தாள். அப்போது யோகி ''பெண்ணே! நீ இசைப் போட்டியில் முதல் பரிசு பெற்று, பட்டம் பெற்றாய் அல்லவா? அதன் பெயர் என்ன?'' என்று கேட்டார். அவளும் ''இசை இளவரசி என்பது'' என்று கூறினாள்.

யோகியும் காந்தநாதனிடம் ''பார்த்தாயா! உன் திருமணத்திற்குப் பிறகு இந்த இளவரசி கிடைத்திருக்கிறாள்'' எனவே வேண்டா வெறுப்பாக அதை ஏற்றுக் கொண்டான். பிறகு அவன் ''சரி. என்ன சொத்து பெருக வில்லையே'' என்று கேட்டான். யோகியும் ''நீ இருக்கும் மனையும் வீடும் இதற்கு முன் என்ன மதிப்பு என்றும் இப்போது எவ்வளவு பெறுமென்றும் இது வரை யாரிடமாவது கேட்டுப் பார்த்திருக்கிறாயா?'' என்று கேட்டார்.

காந்தநாதனும் திகைத்து ''ஆமாம். இப்போது இது பத்து லட்சம் வராகன்களுக்கு மேல் பெறும் முன்பு இதன் மதிப்பு பத்தாயிரம் வராகன்கள் கூட இல்லை'' என்றான். அப்போது யோகி ''பார்த்தாயா! உன் செல்வமும் பெருகிவிட்டது. இந்த மூன்று மாறுதல்கள் ஏற்பட்டாலும் உன்னிடம் எந்த மாற்றமும் ஏற்படாது எனக் கூறினேன். எனவே நான் சொன்னதெல்லாம் நடந்து விட்டது. நீ கேட்டபடி உனக்கு எல்லாம் கிடைத்து விட்டதால் இனி உள்ளதைக் கொண்டு திருப்தி அடைந்து முன் போலவே இனியும் வாழ்க்கையை நடத்தி வா'' என்று அறிவுரை கூறினார்.

காந்தநாதனும் அவரை வணங்கி ''சுவாமி! இப்போதுதான் வாழ்க்கை என்பது என்னவென்று உண்மையில் தெரிந்து கொண்டேன்'' என்று கூறி நின்றான்.



# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ.100

இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1997 டிசம்பர் மாத இதழில் வெளியிடப்படும்.



MAHANTESH C. MORABAD



MAHANTESH C. MORABAD

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ அக்டோபர் 25-ம் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ.100/- பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி', சென்னை—600 026.**

## ஆகஸ்ட் மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ : **தாய்ப் பாசம் இங்கு பாலைப் பொழிந்தது!**

இரண்டாவது போட்டோ : **சேய் நேசம் அங்கு முத்தம் தந்தது!**

பரிசு பெற்றவர் : **கே. இந்திராணி, ஆர்.எஸ்.புரம், கோவை - 2.**




Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., Chandamama Buildings, Chennai - 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, 188, N.S.K. Salai, Vadapalani, Chennai - 600 026 (India) Editor : NAGI REDDI.

AMBULIMAMA (Tamil) October 1997 Regd. No. M. 4863/97
RN 1095 / 57